இந்த இதழில்

# ஆஸ்பத்திரியா ஐயோ வேண்டாம்!

—ஆய்வுக் கட்டுரை

KALKI 19.2.84 ரூ.1.20



# ஹா...ச்சு ஹா...ச்சு
# நாளே பாழாய்ப் போ...ச்சு

ஜலதோஷம் உங்கள் நாளையே பாழாக்க விடாதீர்கள். மூக்கு ஒழுகல், அடைப்பு, தலை பளு. இவை ஜலதோஷத்திற்கே உரித்தான அறிகுறிகளாகும். இதனால் உங்களுக்கும் தொல்லை, உங்கள் நாளுக்கும் தொல்லை. சிந்தித்துச் செயல்பட வேண்டாமா? கோல்டரின் சாப்பிட்டுப் பாருங்களேன்! அது விசேட ஃபார்முலாவின்படி தயாரான ஜலதோஷ மாத்திரையாகும். வசதிக்கு வசதி, நிவாரணத்திற்கு நிவாரணம்!

**ஜலதோஷம் வாட்டுகிறதா?**
**கோல்டரின் அதை விரட்டுகிறது.**




CASBC 111-203 TAM

# பாலா

பாலசரஸ்வதி என்று யார் பெயர் வைத்தார்களோ! அந்தத் தீர்க்க தரிசனம் நம்மை வியக்கச் செய்கிறது. பாலாவின் நாட்டியம் நித்திய யௌவனத்தின் வனப்புடனேயே விளங்கியதை நாம் கண்டோம். சரஸ்வதிதேவியின் கடாட்சம் அவரிடம் பரிபூரணமாக நிரம்பியிருந்ததையும் பார்த்தோம்.

வீணை தனம்மாளின் இசைக்கலையைப் பிதிரார்ச்சித சம்பத்தாகப் பெற்றவர் பேத்தி பாலா.

நாட்டியம் ஆடுவதே கேவலம் என்றும் நடனத்தைப் பார்ப்பதே இழிவு என்றும் கருதப்பட்டு வந்த ஒரு காலத்தில் பரத நாட்டியத்துக்கு தெய்வமாக் கலை என்ற அந்தஸ்த்தை அளித்தவர் என்ற முறையில் பாலா முன்னோடியாகிறார். அதற்கு அவருக்குப் பக்கபலமாக இருந்து ஊக்குவித்தவர்கள் ரசிகமணி டி.கே.சி., கல்கி, ஈ. கிருஷ்ணய்யர்.

நாட்டியக் கலைக்கு ஜீவநாடியான சுவை சிருங்கார ரசம்தான் என்பது பாலாவின் கொள்கை. தெருவில் வாரானோ, திருவொற்றியூர் தியாகராஜன், வேலவரே முதலிய தமிழ்ப் பதங்களை அவர் கையாண்ட விதமும் பொருளையும் இசையையும் குழைத்து அளித்த விதமும் நினைத்தாலே சிலிர்ப்பை ஏற்படுத்துவன. க்ஷேத்ரக்ஞர் பதங்களும் ஜாவளிகளும் அவர் இஷ்டப்படியெல்லாம் வளைந்து கொடுத்தன. ஆயினும் பாலாவின் அபிநயத்தைப் பற்றி நினைக்கும்போது முதலில் நினைவுக்கு வருவது 'கிருஷ்ணா நீ பேகனே பாரோ' என்ற தாஸர் நாமாதான். கரங்களை நீட்டி அவர் கண்ணனைக் கண்களால் புன்னகையோடு அழைக்கும் போது கண்ணன் நம் கண் முன்னால் தோன்றுவான்.

இளம் வயதில் நிருத்தியத்துக்கு முக்கியத்துவம் தந்து காண்போர் வியக்க ஆடிய பாலா போகப்போக மனமுதிர்ச்சி அடைந்தபோது பாவத்துக்கு பிராதான்யம் அளிக்கத் தொடங்கினார். மேடையில் ஆடிக்கொண்டிருக்கும் போதே புதிய புதிய கற்பனைகள் அவருக்குத் தோன்றும். ஒரு சமயம் அகாடெமியில் நடனமாடிக் கொண்டிருக்கும்போது மிருதங்கத்தின் தொப்பி கிழிந்துபோக வேறு வாத்தியம் வந்து சேரும்வரை பாலா பாடலின் அந்த வரிக்கே விதம் விதமான கற்பனைகளுடன் பாவங்களை வெளிப்படுத்தி யாருமே சிறிதும் அலுப்பு உணராத விதமாக ஆடிக் கொண்டிருந்தார்! இப்படி அற்புதம் நிகழ்த்திய பாலாவின் அருகில் நின்றாலே அவருடைய மேதைத் தன்மையின் அளவினை நாம் உணர்வோம். அவ்வாறிருக்க சங்கீத கலாநிதி, இசைப் பேரறிஞர் போன்ற பல்வேறு பட்டங்கள் அவரை வந்தடைந்து பெருமையுற்றதில் வியப்பில்லை. பூரணக் கலைஞராக விளங்கிய பாலசரஸ்வதி உலகம் முழுதும் புகழ் பெற்றதிலும் ஆச்சர்யமில்லை.

பாலா பாடும்போது அவருடைய மென்மையான குரலின் குழைவும் சங்கதிகளின் நேர்த்தியும் மரபு பிறழாமல் பாடும் பண்பும் இசை உலக ஜாம்பவான்கள் எல்லோரும் அதிசயித்து ரசிக்கும்படி இருக்கும். அவர் மறைந்தபோது அவருக்கு இறுதி மரியாதை செலுத்த வந்தவர்களில் பிரசித்திபெற்ற நடனமணிகள் காணப்பட்டனர். அதைவிட அதிகமாக சங்கீத வித்வான்கள் தென்பட்டனர்.

சிவகாமியின் சபதத்தில் நடனக் கலைக்கென்றே பிறந்து வாழ்ந்த சிவகாமி பற்றி அமரர் கல்கி எழுதுகையில் ஓரிடத்தில், என்றாவது சிவகாமி அமரத்துவம் அடைந்தால் அப்போது அவள் உடல் கரைந்து ராகங்களாகவும் பாவங்களாகவும் தாளங்களாகவும் உருமாறி விடும் என்று பொருள்பட வர்ணிக்கிறார். பாலா காலமான செய்தி கேட்டபோது அமரர் கல்கியின் இந்தக் கருத்துத்தான் நினைவுக்கு வந்தது. பாலா நம்மைவிட்டு எங்கும் போய்விடவில்லை. நம்மிடையே சுத்தமான கர்நாடக இசையாகவும் தெய்வீகமான பரத நாட்டியக் கலையாகவும் உருமாறி வாழ்கிறார். அந்தக் கலைச் செல்வங்களை அவருக்குப் பெருமை சேர்க்கும் விதமாகப் பயபக்தியுடன் கொள்வோம்.







# ஆஸ்பத்திரியா ஐயோ வேண்டாம்!

பெப்டிக் அல்ஸர் ஆபரேஷன் ஒன்றுக்கு அனுமதிக்கப்பட்டிருந்தார் ஒருவர் ஸ்டான்லி ஆஸ்பத்திரியில். ஏற்கெனவே ஒரு முறை வயிற்றில் வேறு ஒரு ஆபரேஷன் செய்திருந்ததனால் இன்னொரு முறை வயிற்றைக் கிழித்து ஆபரேஷன் செய்வது சற்றுக் கடினமானதென்று டாக்டர் அபிப்பிராயப்பட்டார். நோயாளியின் மனைவியைக் கூப்பிட்டுத் தன்னை வீட்டில் வந்து சந்திக்குமாறு சொல்லி விட்டுப் போனார். மனைவியும் சென்றார். ''உங்கள் கணவருக்கு ஆபரேஷன் செய்வதென்பது சிக்கலான காரியம் தான். ஆனால் வெற்றிகரமாகச் செய்து விட முடியும் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. நீங்கள் 500 ரூபாய் பணம் கொடுத்தால் செய்கிறேன்'' என்றார்.

ஆஸ்பத்திரி கருவிகளை வைத்துக் கொண்டு, ஆஸ்பத்திரி ஆபரேஷன் தியேட்டரில் ஆபரேஷன் செய்வதற்குத் தனியாக இவருக்குப் பணம்! அப்படியென்றால் இவர் வாங்கும் சம்பளம் எதற்கு? இந்த டாக்டர் என்ன அரசாங்க ஊழியரா அல்லது வழிப்பறிக் கொள்ளைக்காரரா?

• வடசென்னையில் உள்ள ஆர். எஸ். ஆர். எம். ஆஸ்பத்திரியில் மனைவியைப் பிரசவத்திற்காகச் சேர்த்திருந்தார் ஒருவர். பிரசவமான அன்று அவரிடம் பணம் இல்லை. அதனால் ஆணா, பெண்ணா என்ன குழந்தை பிறந்திருக்கிறது என்பதைக் கூட அவரால் தெரிந்து கொள்ள முடியவில்லை! பிரசவத்திற்குப் பின் மனைவியை ஸ்ட்ரெச்சரில் வைத்துத் தள்ளிக் கொண்டு வரும் போது அந்த வண்டியை ஒரு சரிவான இடத்தில் நிறுத்தி வைத்து 'பணம் தருகிறீர்களா' என்று மிரட்டி இருக்கிறார்கள். என்ன கொடுமை! போகிற போக்கைப் பார்த்தால் ஆஸ்பத்திரி சுவர்களும், நாற்காலிகளும் கூடப் பணம் பிடுங்கும் போலிருக்கிறது.

''பணம் கொடுத்தால் தானே காரியம் நடக்கும்'' என்ற கேடு கெட்ட மனப்பான்மை தங்கள் உரிமைகளை அறியாத மக்களிடையே வளர்ந்து வருகிறது.



• அரசாங்க ஆஸ்பத்திரிகளில் ஒருவர் குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் செய்து கொண்டால் அரசாங்கம் தரும் பணம் முழுவதும் அவருக்குக் கிடைக்காது. அதில் டாக்டரிலிருந்து பெருக்குபவர்வரை பலருக்கும் பங்கு உண்டு!

• சென்னை பெரம்பூரிலுள்ள ரயில்வே ஆஸ்பத்திரியில் திறந்த இருதய அறுவை செய்கிறார்கள். வடநாட்டைச் சேர்ந்த ஒருவர் இந்த ஆபரேஷனுக்காக அங்கே அனுமதிக்கப்பட்டிருந்தார். ஆனால் ஆபரேஷன் போது தேவைப்பட்ட 'பி' பாஸிடிவ் ரத்தம் ஆஸ்பத்திரியில் இல்லை. நோயாளியிடம், 'ஏழு பாட்டில் ரத்தம் தேவை. நீங்களோ ஏற்பாடு செய்து கொடுங்கள்' என்று சொல்லி விட்டார்கள்! நாளைக்கு, 'நீங்களே ஆபரேஷன் செய்து கொள்ளுங்கள்' என்று சொல்வார்களோ?

• சென்னையில் மையமான இடத்திலுள்ள ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில், விபத்துக்கான தனிப் பிரிவு கட்டிடம் முடியும் தறுவாயிலிருக்கிறது. தமிழ் நாட்டில் ஜனாதிபதி ஆட்சியின் போது, ஆளுநரின் ஆலோசகர் அடிக்கல்நாட்டியுள்ளார். எப்போது செயல்படத் தொடங்கும்? சரியான பதிலே கிடைக்கவில்லை.

பொதுப் பிரிவில் ஒரு நோயாளியைப் பார்த்த போது, ''நல்லா கவனிச்

சிக்கிறாங்க'' என்றார்.

''உணவு சரியாக அளிக்கிறார்களா?''

''அதுதாங்க இல்லே. நேத்திக்கு அட்மிட் பண்ணினேன் என் பெண்ணை. ஆறு நாளையிலிருந்துதான் ரொட்டி கொடுப்பாங்களாம்'' என்றார்.

ஒரு டாக்டரைச் சந்தித்து விசாரித்தோம். ''அது நிர்வாகத்தினுள்ள சிக்கல்'' என்று சுலபமாகச் சொல்லி விட்டார். சிக்கலை யார் அவிழ்ப்பது? அனுமதிச் சீட்டு குறிப்பிட்ட ''வினியோகப்பகுதிக்குச்'' சென்று உணவு அளிக்க 24 மணி நேரம் ஆகுமாம்.

''எல்லாவிதமான நவீன உபகரணங்களும் இருக்கின்றன என்றார் டாக்டர். சில முக்கியமான தருணங்களில், தேவையான மருந்துகள் ஆஸ்பத்திரியிலேயே கிடைக்காமல் போவதை மட்டும் ஒரு குறையாகச் சொன்னார்.



○ கோவை மருத்துவக்கல்லூரி மருத்துவமனை

## மதுரை மருத்துவமனையில்

சென்னையில் இப்படி. மதுரையில் எப்படி என்று பார்க்க எண்ணி ராஜாஜி மருத்துவமனையை வலம் வந்த போது...

● மருத்துவமனையின் வளாகத்தில் மிகச் சுதந்திரமாகச் சுற்றித் திரிபவை குரங்குகள் தான். நோயாளிகள் வைத்திருக்கும் உணவுப் பொருட்களை மிரட்டிப் பறித்துச் சென்று விடுமாம். குரங்குகளின் அட்டகாசத்தை நிறுத்த வழி செய்யக் கூடாதா?

● வெளி நோயாளிகள் பகுதியில் வழக்கமான கூட்டம். ஒவ்வொரு பிரிவின் வெளி நோயாளிகள் பகுதியும் வெவ்வேறு இடத்தில் அமைந்திருப்பதால் நோயாளிகள் மிகவும் அலைக்கழிக்கப்படுகிறார்கள். எல்லாப் பிரிவுகளின் வெளிநோயாளிகளின் பகுதியையும் ஒரே 'கட்டிடத்தில் வைத்தால் மிகவும் வசதியாக இருக்குமே!

● மருந்துகள் கொடுக்குமிடத்தில் எக்கச்சக்கமான கும்பல். 1965-க்குப் பிறகு பார்மஸிஸ்ட் பணிக்கு ஆட்கள் தேர்ந்தெடுக்கப் படவில்லையாம்.

● ஆஸ்பத்திரியின் மிகப் பெரிய பிரச்சினை தண்ணீர் பிரச்சினை தான். தண்ணீர் இல்லாததால் சிலசமயங்களில் லபாரட்டரி பரிசோதனைகள் மட்டுமின்றி வேறு பலவும் பாதிக்கப் படுகின்றன.

● சிறுநீரகம் வேலை செய்யாத நோயாளிகளுக்கு 'டயலிஸிஸ்' கருவி மூலம் சிகிச்சை அளிக்கப்படும். இந்த ஆஸ்பத்திரியில் உள்ள டயலிஸிஸ் கருவி கடந்த பல ஆண்டுகளாகவே வேலை செய்யவில்லை. போர்ட்டபிள் எக்ஸ்ரே மிஷினும் அப்படியே.

● 12 ஆபரேஷன் தியேட்டர்கள் இருக்கின்றன. எல்லாமே நன்றாக வைக்கப்பட்டு இருக்கின்றன.

● ஆஸ்பத்திரி வளாகத்தில் மின்சார வசதிகள் சரியில்லை. இரவு நேரத்தில் விபச்சாரம் கூட நடப்பதாக இங்கு பணிபுரிபவர்கள் கூறினார்கள்.

● எல்லா ஆஸ்பத்திரிகளிலும் நடப்பது போல இங்கும் மருந்துகள் திருடு போகின்றன. சென்ற வருடம் டிபன் பாக்ஸ் முழுக்க இன்ஜெக்ஷன் மருந்துகளை எடுத்துச் சென்ற ஆஸ்பத்திரி பணியாளர் ஒருவர் கைது செய்யப் பட்டார்.

● இந்த ஆஸ்பத்திரி செய்யும் மிக நல்ல காரியம் நோயாளியைத் தொடர்ந்து கண்காணிப்பது தான். ஒரு நோயாளியை மூன்று மாதம் கழித்து வந்து பாருங்கள் என்று சொல்லி விட்டு அவர் வராமலிருந்

○ செல்லப்பன்



நாள் கடிதம் போட்டு அழைக்கிறார்கள். அப்படியும் வரவில்லையென்றால் சமூக சேவகிகளை அனுப்பி விவரம் கேட்கிறார்கள்.

• கட்டிலில் படுத்திருக்கும் நோயாளிகளைத் தேடி அதிர்ஷ்டம் வருகிறது... ஆமாம்! லாட்டரி சீட்டுகள் உள்ளேயே விற்கப்படுகின்றன.

• குழந்தைகள் சிகிச்சைக்காக புதிய கட்டிடம் கட்டி பல மாதங்கள் ஆகியும் இன்னும் அந்தப் பிரிவு அங்கு செயல்பட ஆரம்பிக்கவில்லை!

• 'இதய நோய்' வார்டு மிகவும் சுத்தமாக வைக்கப்பட்டிருக்கிறது.

• ஆஸ்பத்திரி சமையல் அறையிலிருந்து பொருட்கள் திருடு போவது மிகவும் சகஜம். கேன்களில் வரும் பால் அப்படியே கடத்தப்படுகிறதாம்.

• கட்டிலில் போடப்பட்டிருக்கும் பெட்ஷீட்கள் மிகவும் மோசமான நிலையில் இருக்கின்றன. இத்தனைக்கும் இந்த ஆஸ்பத்திரியில் மிகச் சிறந்த நீராவி சலவை இயந்திரம் இருக்கிறது.

**கோவை மருத்துவக் கல்லூரி மருத்துவமனை**

கட்டுப்போடுகிற பகுதியில் அந்த அறையிலிருந்து வெளியில் வந்த பெரியவருடன் பேசினேன்.

கோவைக்குப் பக்கத்தில் சொந்த ஊர். ஒன்றரை வருடங்களுக்கு முன் காலில் சின்னக் கட்டி வந்து. ஏதோ தானே நாட்டு வைத்தியம் செய்து கொண்டு சின்ன விஷயம் பூதாகாரமாய் உருவெடுத்து கடைசியில் இந்த ஆஸ்பத்திரிக்கு வர ஆரம்பித்திருக்கிறார். ஓராண்டாகிறது விரல்களை வெட்டி எடுத்து. கடந்த ஏழெட்டு மாதங்களாய் வாரம் ஒருமுறை வந்து, மருந்து வைத்துக் கட்டுப் போட்டுக் கொண்டு போகிறார். ''நல்லா கவனிச்சுக் கட்டுப் போடுறாங்க'' என்றார்.

ஒரு பகுதியில் இரண்டு பக்கமும் வராண்டா. அதன் ஒரு பக்க வராண்டாவில்,

---

# படவுலகுக்கு பை...பை.....

## செய்தி வெடிகள்

★ இந்திப் பட உலகுக்கு 'குட்பை' சொல்லிவிட்டுச் சென்னை வந்து நாட்டியப்பள்ளி தொடங்கப் போகிறேன்.

—ஹேமமாலினி.

• பட உலகுக்கு 'பைபை' சொல்லிவிட்டு நாட்டிய உலகில் 'தைதை' சொல்லப் போகிறார் போலும்.

★ நடிகர் ராஜ்குமார் வீட்டுமுன் ஜனதாக் கட்சி உண்ணாவிரதம்! —செய்தி.

• இப்படி எத்தனையோ பேர் நாட்டில் உண்ணாவிரதமிருந்தும், உணவுப் பண்டங்கள் விலை குறையவில்லையே!

★ தங்கள் தேர்தல் பிரசாரத்துக்குப் பயன்படுத்த அ. தி. மு. க. வும், தி. மு. க. வும் விட்டுச் சுவர்களை 'ரிசர்வ்' செய்யத் தொடங்கி விட்டார்கள். —ஒரு செய்தி.

• தேர்தல் வரும் முன்பே வீட்டை அசிங்கப்படுத்துகிறவர்கள் தேர்தலுக்குப் பிறகு, நாட்டை அசிங்கப்படுத்தப் போகிறார்கள்!

★ ஒரே பிரசவத்தில் மூன்றுக்கு மேல் அதிகக் குழந்தைகளைப் பெறுவதில் ஜமாய்க்காதான் முன்னணியில் இருக்கிறது.

—ஒரு செய்தி.

• ஜமாய்க்கிறார்கள் போலிருக்கிறது!

★ தி. மு. க. தலைவர் கருணாநிதியும், அமைச்சர் ராஜேந்திரனும் ஒன்றாகப் பிரயாணம் செய்த பாண்டியன் எக்ஸ்பிரஸ் ஏ. ஸி. கோச்சில் தீப்பொறி கிளம்பியது.

—ஒரு செய்தி.

• ஏதாவது 'சூடான' விஷயம் பற்றிக் 'கனல் தெறிக்க' விவாதித்திருப்பார்கள்!

★ பரூக் அப்துல்லாவை இந்திராகாந்தி கைது செய்தால் அவர் ஆட்சி கவிழும்.

—சந்திரசேகர்.

• இந்திரா கவிழ்வதை விரும்பும் சந்திரசேகர், பரூக் கைதாவதை வரவேற்க வேண்டியதுதானே!

★ இந்திய — பங்களாதேஷ் எல்லையில், முள்கம்பி வேலி போடும் பணி துவக்கப்பட்டு விட்டது. —இந்திராகாந்தி.

• இனி, இந்தியா — பங்களாதேஷ் பிரச்னைகள் எதுவாயினும் 'முள்ளின் மேல் போட்ட சேலை போல' ஜாக்கிரதையாகவே அணுக வேண்டியிருக்கும்!

—மகரம்






பிலிப்ஸ்

# இந்த 60W லாம்ப், 100W பல்பு தரும் ஒளியைத் தருகிறது.



மின் கட்டணத்தில் 24 ரூபாய் மிச்சம்.

## பிலிப்ஸ். ஆர்ஜென்ட்டா ஸ்ப்பர்லக்ஸ்.

ஆர்ஜென்ட்டா ஸுப்பர்லக்ஸ்-தேவையான இடத்திலே அதிக ஒளியைக் குவித்துப் பாய்ச்சும் வகையிலே பனிப்படலம்போல் பூச்சுள்ள சாளரம் கொண்டது. இப்படி குவித்த ஒளிக்கதிர் காரணமாக, 60W ஆர்ஜென்ட்டா ஸுப்பர்லக்ஸ், சாதாரண 100W பல்பு தரும் ஒளியினைத் தருகிறது.

நீடித்திருக்கும் ஆர்ஜென்ட்டா ஸுப்பர்லக்ஸ், உமது மின் கட்டணத்திலே, ஆண்டுக்கு 24 ரூபாய் சேமிக்கிறது.

படிக்க, ஓவியம் தீட்ட, வரைய, நிட்டிங் செய்ய மிகச் சிறந்தது இந்த லாம்ப்.

40W மற்றும் 60W வகைகளில் கிடைக்கும்.

**பிலிப்ஸ் ஆர்ஜென்ட்டா ஸுப்பர்லக்ஸ்—**
**100W பல்பின் ஒளிதரும் 60W லாம்ப்.**

HTB-PEI-9727

பிலிப்ஸ்—ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்

வரிசையாய்க் கட்டில்கள்—நோயாளிகள். இன்னொரு வரிசையில் தரையில் பாய் தலைகாணியில்நோயாளிகள். பரிதாபமாய் இருந்தது! மழை பெய்தால் சாரல் அடிக்கும்.

ஏன் இப்படி என்று வராண்டா நோயாளிகள் பற்றி ஒரு டாக்டரிடம் கேட்டேன். வாயை விரலால் மூடிக் கொண்டு ''என்கிட்ட ஒன்னும் கேக்காதீங்க'' என்றார்.

மேலும் வற்புறுத்தவும் ''நம் ஆஸ்பத்திரிகளில் வருகிற நோயாளிகள் எண்ணிக்கைக்கேற்ப படுக்கைகளை, இதர வசதிகளை அதிகரிப்பது கிடையாது. இன்றைய நிலையிலேயே பட்ஜெட்டில் ஒதுக்கப்படும் தொகையைப் போல இரண்டு மடங்காகிவிடுகிறது. பணத்துக்கு எங்கே போவது?

''இன்னொரு காரணம்... ஒருசில ஏழை கிராமத்து ஜனங்கள் — ஆஸ்பத்திரிகளில் பிரெட், பால் எல்லாம் தருகிறார்கள் என்ற காரணத்துக்காகவே, நோய் தீர்ந்து போய் விட்டால் கூட, இன்னும் சரியாகவில்லை. வலி முழுமையாய்ப் போய் விடவில்லை என்றெல்லாம் சொல்லி தகராறு பண்ணுவார்கள். அவர்களைச் சமாளிக்க ஒரே வழி அவர்களை வராண்டாவுக்கு அனுப்புவதுதான்.''

ஒரு கடைநிலை ஊழியருடன் பேசியபோது:''ஏங்க கண்ட எடத்துலேயும் எல்லாரையும் உள்ளே விடறீங்களே?'' ''என்ன சார் பண்ணறது தடுத்தா, நாங்க குடுக்கற வரிலதானே கவர்ன்மெண்ட்டு உங்களுக்கு சம்பளம் தருது. எங்களையே தடுக்கறியேன்னு கேக்கறாங்க.''

''அதுசரி! வரவங்ககிட்ட அப்பப்ப ஒண்ணு ரெண்டு வாங்கிக்கறீங்களே? இது நியாயமா?

''என்ன சார்! நீங்க படிச்சவங்களா இருக்கீங்க.. உங்களுக்கே இதுக்கு பதில் தெரியும். என்னைக் கேக்கறீங்களே இது நியாயமா?''



''அடுத்த வீட்டுத்தம்பதியர் சண்டையை, நீயோ அல்லது உன் மனைவியோ தினமும் போய் விலக்கி விடுவீர்களே, இன்று ஏன் போகவில்லை?''

''இன்று யார்போவது என்பதில் எங்களுக்குள் சண்டை வந்துவிட்டது!''

ஆர்.மார்க்கண்டன்

## பொதுவாகச் சில:

பொது மருத்துவமனைகளில் நிலைமை இவ்வளவு மோசமானதற்குக் காரணங்கள் என்ன?

சில டாக்டர்களைக்கேட்ட பொழுது பல காரணங்களை கூறினார்கள்.

தமிழக நலத்துறை அமைச்சர் எச்.வி. ஹண்டே ஆரம்ப சுகாதார நிலையங்களுக்குச் செல்ல வேண்டிய டாக்டர்கள் கண்டிப்பாகச் சென்றே தீர வேண்டும் என்று ஆணையிட்டது மிகச் சரியான ஒன்றுதான். ஆனால் ஆரம்ப சுகாதார நிலையங்களுக்கு அனுப்பப்படும் டாக்டர்கள் அனுபவம் வாய்ந்தவர்களாக இருப்பது அவசியம். புதிதாக வருபவர்களை எல்லாம் அங்கே பணி செய்ய அனுப்புவது மிகத் தவறு என்றார் ஒரு டாக்டர். வேறு ஒரு டாக்டர், ''மருத்துவக்கல்லூரிப் படிப்பை இரு பிரிவுகளாக்க வேண்டும்'' என்றார். நம்முடைய இன்றைய சமுதாயத்துக்கு தேவைப்படும் அடிப்படைஆரோக்கியத்தைக் கவனித்து ஆவன செய்ய எல்லாருக்கும் எம். பி. பி. எஸ். படிப்பு தேவையில்லை.

எம். பி. பி. எஸ். படித்த ஒருவர் துபாய்க்கோ, அமெரிக்காவுக்கோ, போகத் தான் துடிப்பார். ஆனால் எல். எம். பி. படித்தால் நமது நாட்டிலேயே கிராமத்தில் கூட பணிபுரிய மகிழ்ச்சியோடு முன்வருவார். இத்தகைய குறைந்தபட்சத் தகுதி உள்ள டாக்டர் பட்டாளத்தை நாம் உருவாக்க வேண்டும். அவர்களை ஆரம்ப சுகாதார நிலையங்களுக்கு அனுப்பலாம்.

மருந்துகள் விலை அதிகமாயிருக்கிறதே என்ற போது ஒரு டாக்டர் சொன்னார். அதுவே தேவலாம். விலை குறைவாக இருந்து அதில் மருந்தே இல்லாமல் இருக்கலாமல்லவா? என்றாலும் 200—லிருந்து 2000 சதவிகிதம் வரை லாபம் வைத்துத்தான் மருந்துகள் விற்கப்படுகின்றன என்று தெரிய வருகிறது.

வசதி உள்ளவர்கள் தங்களுக்குத் தேவையான உணவை வரவழைத்துக் கொள்ளலாமல்லவா? எல்லோருக்கும் மருத்துவமனை உணவுதான் என்பதால் வரிப்பணம் வீணாகிறதே?

மருத்துவமனையில் உள்ள அத்தியாவசியமான இயந்திரங்கள் பல பழுதான நிலையில்தானே இருக்கின்றன! காரணம் என்ன? State Electro Medical Cell என்ற தனிப்பிரிவு தான் பழுது பார்க்க வேண்டுமாம். சீக்கிரத்தில் அவர்கள் பழுது பார்க்க மாட்டார்கள். மெத்தனம் எந்த அரசாங்க இலாக்காவில் இல்லை?

டாக்டர்கள் மருத்துவமனையில் இல்லாத மருந்துகளை எழுதிக் கொடுக்கக் கூடாது என ஒரு சட்டம் இருக்கிறது. மருத்துவமனையிலோ மருந்துகள் கிடையாது. வெளியில் கிடைக்கும் மருந்துகளையோ எழுதித் தரக் கூடாது. 'உயிர்காக்கும் பணி' இந்த லட்சணத்தில் நடக்கிறது!

பல்கலைக் கழகத்திலேயே எம். பி. பி. எஸ். அறுவை சிகிச்சையில் முதலிடத்தைப் பெற்ற மாணவிக்கு எம்.எஸ்ஸில் இடம் கிடைக்கவில்லை. காரணம் இட ஒதுக்கீடு, லஞ்ச ஊழல். இந்தத் தரம் கெட்ட சூழ்நிலையில் மருத்துவத்துறை தான்

உங்களைக் கொன்று அதற்கு உங்களிடமே பணமும் வாங்கிக் கொண்டு அதற்கு நன்றியும் பெறும் துறை என்று சொல்வது மிகையாகாதல்லவா.

### மீண்டும் சென்னை

அரசாங்க ஆஸ்பத்திரிகளின் பராமரிப்பு பொதுப் பணித் துறையின் கையில் தான் இருக்கிறது. ஆகையால் ஒவ்வொரு சிறு ரிப்பேர் ஆனாலும் அவர்களையே எதிர்பார்க்கவேண்டிய நிலை, தாமதங்கள். ஆஸ்பத்திரி கட்டடங்களைப் பராமரிக்கத் தனித்துறை இருந்தால் சங்கடங்கள் குறையும் என்று தோன்றுகிறது. காதைக் கிட்டே கொண்டு வாருங்கள்: ஒரு ரகசியம். இருபது நாட்களாகச் சென்னையின் ஒரு முக்கிய ஆஸ்பத்திரியில் ஆபரேஷன் எதுவும் நடத்த முடியவில்லை. காரணம்: தண்ணீர்க் குழாயும், கழிவு நீர்க் குழாயும் எங்கேயோ இணைந்து போய் அசுத்தம் பரவி விட்டது என்று தெரிகிறது. முன் ஜாக்கிரதையாக மூடிவிட்டார்கள் ஆபரேஷன் தியேட்டரை!

துப்புரவுப் பணிகளுக்காக இத்தனை கடைநிலைச் சிப்பந்திகள் இருந்தும் என்ன பயன்? சென்னை நகர ஆஸ்பத்திரிகளைப் பொறுத்த வரை அவர்களை ஒழுங்காக, கட்டுப்பாட்டோடு வேலை வாங்க யாரால் முடியும்! இவர்கள் ஒழுங்காக வேலை செய்கிறார்களா என்று கண்காணிக்கத்தான் யாரால் முடியும்! ஆனால் இந்த நிலைமை வெளியூர் ஆஸ்பத்திரிகளில் அவ்வளவாக இல்லை என்று, விசாரித்ததில் தெரிந்தது. அங்கே ஒரு யூனிட்டிலிருந்து இன்னோர் யூனிட்டுக்கு மாற்றலாம், தகராறு இல்லை. இங்கே ஒரு டாக்டரை ஒரு பிரிவிலிருந்து இன்னொரு பிரிவுக்கே மாற்ற இயலாது! வெளியூர்களில், இந்த மாற்றல் பூச்சாண்டிக்குப் பயந்தே சற்று ஒழுங்காக வேலை செய்கிறார்கள் போலும்.

நிர்வாகப் பிரிவில் கூடுதல் ஆட்களை நியமித்தால் தானே? வருடக்கணக்காக அதே எண்ணிக்கை. அதுவும் குடும்ப நலச் சிகிச்சை முகாம்கள், குடும்ப நல தினசரி இலக்குகள், திட்டங்கள் எல்லாம் துவங்கிய பிறகு பணப்புழக்கம் அதிகமாகிவிட்டது. குறைந்தபட்சமாக, பத்தாயிரம் ரூபாய் கைவசம் வைத்திருக்க வேண்டிய நிலை. வெளியூர் ஆஸ்பத்திரிகளில் லே-செக்ரட்டரி என்கிற நிர்வாக அதிகாரிக்குத்திண்டாட்டம்தான்! மாவட்ட மருத்துவ அதிகாரிக்கு அன்றாட நிர்வாகத்தில் உதவுவது தவிர, ஆஸ்பத்திரி சிப்பந்திகள் சம்பளம், நிர்வாகச் செலவுமுறைகள், அக்கவுண்ட்ஸ், எல்லாம் இவர் தலையில்தான். நிர்வாகச் சுமை ஏறினால் விரிசல் காணுவது இயற்கை.

'கௌரவ டாக்டர் முறை' அகௌரவமான விதத்தில் பயன்படுத்தப்படுகிறது. சில டாக்டர்கள் தங்கள் பிரைவேட் பிராக்டீஸ் நோயாளிகளை பேரியம் மீல், ஈ.ஸி.ஜி., எக்ஸ்ரே, முதலிய எல்லா சோதனைகளையும் நாங்கள் பணிபுரியும் சர்க்கார் ஆஸ்பத்திரிகளிலேயே செய்துகொள்ளச் சொல்லுகிறார்கள். இந்த ஸ்பெஷலிஸ்ட்டுகள் தினசரியாவது ஒழுங்காக வருகிறார்களா என்றால் அதுவும் கிடையாது. அவர்கள் இஷ்டம்! மருத்துவக்கல்லூரி அல்லாத ஆஸ்பத்திரிகளில் இந்த கௌரவ டாக்டர் முறை இல்லை. அந்த மட்டும் தப்பினோம்.



பேரன்: அப்பாவும், அம்மாவும் சினிமாவுக்கு போகையிலே 'நான் தொந்தரவா இருப்பேனின்னு என்னை விட்டுட்டுப் போயிட்டாங்க தாத்தா. நீங்க போகையிலே என்னை அழைச்சிட்டுப் போங்க தாத்தா.

தாத்தா: எதுக்கும் பாட்டியைக் கேட்டுச் சொல்றேன்.

—க். பெருமாள்சாமி.



சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் சிகிச்சைப் பெற வருகிறவர்களில் நூற்றுக்கு தொண்ணூறு பேர் 300 ரூபாய்க்குக் கீழே தான் சம்பளம் வாங்குகிறார்கள் போலும்! இல்லை என்றால் இலவசச் சிகிச்சைக்கு வழி கிடையாது. எனவே ஸம் திங் பெற்றுக் கொண்டு கடைநிலைச் சிப்பந்தி ஒருவர், சம்பள விவரம் எழுதும் அஸெஸரிடம் திடீரென்று பிரசன்னமாகி, ''நம்ம ஆளு சார் இவரு! போடு சார் 250 ரூபா சம்பளம்னு!'' என்று சிபாரிசு செய்வதை சகஜமாகக் காணலாம். ஆயிரம் ரூபாய் வரை இலவச சிகிச்சை என்று கூறி விட்டால் பொய் சொல்வதையாவது தடுக்கலாம்!

### ஜி. ஹெச்.

ஜி. ஹெச். சில் ஆறும் வார்டுக்கு எதிரே மாடிப் படியை ஒட்டிய டாய்லெட்டிலிருந்து வரும் துர்கந்தம் மூக்கைத் துளைக்கிறது. உள்ளே கூடச் செல்லாமல் ஒருவர் வார்டை ஒட்டியே சிறுநீர்ப் பாசனம் மேற்கொண்டிருந்தார். உள்ளே இன்னும் மோசமோ என்னவோ!

நர்சுகளுக்கு நோயாளிகள் பணிவிடையைத் தவிர, எழுத்து வேலை அல்லது குமாஸ்தா வேலை எக்கச்சக்கம். ஏன் ஒரேயடியாக மூன்று வேளை மாத்திரைகளையும் ஒரே தடவையில் நோயாளியிடம் கொடுத்து விட்டு 'நீங்களே பார்த்துச் சாப்பிட்டுக் கொள்ளுங்கள்!' என்று சொல்ல மாட்டார்கள்! உட்கார்ந்த இடத்திலேயே இருந்து கொண்டு நோயாளியின் டெம்பரேச்சரை



## வாரம் ஒரு புத்தகம்



# நிலாக் காலத்து மயக்கங்கள்

புதிய அரிச்சுவடி

நாம்
கனவுகளை நேசிக்கிற
அளவுக்கு
கடமையை நேசிப்பதில்லை!

ஆகாயத்தில்போய் ஊஞ்சல்
கட்டி

ஏழையின் கனவுபோல்
புஸ்வாணமாகும்!

ஓலைக் குடிசையில்
சிம்னி விளக்கின்
சின்னத் திரிகள்
எரியாத போது
பட்டாசுத் திரிகளை
யார் கொளுத்தி வைப்பது?

ஆடிப்பாடுவோம்
அதனுடன்—
மாமரக்கிளையில்
மர ஊஞ்சலாவது
கட்டுவோம்!

நாம்
கட்டிக் கொள்வது
எட்டுமுழ வேட்டியாக
இருந்தாலும்
கண்களைத் துடைக்கப்
பயன்படுவது
கைக்குட்டைகள் மட்டுமே!

**இன்று விடிகிறது
தீபாவளி!**

தெரிகிறதா தோழி
இன்று விடிகிறது தீபாவளி!
தெரிகிறதா தோழி?

வாழ்க்கைச் சக்கரங்கள்
ஓடாதபோதும்
சிலர் வீட்டில்
சங்கு சக்கரங்கள் சுழலும்
சில வெடிகள்

தெரிகிறதா தோழி
இன்று விடிகிறது தீபாவளி
தெரிகிறதா தோழி?

**நிலாக்காலத்து
மயக்கங்கள்**

செல்லம்மா!
சின்ன வயல் தாண்டி
செந்தாழம் பூச்சூடி
என் அருகே — நீ
ஏன் வந்தாய் சொல்லம்மா.

உன்
ஈர விழி நதிகள்
கரைதேடி அலைந்திருக்கும்!
நானோ
நதியின் முகம் தேடி
கடலோரம் அலைகின்றேன்.

ஒரு கோடி கவியெழுத
நீ இருக்க — தோழி
ஓடும் நிலவெதற்கு?

உனது
கைகளில் சூட்ட
வளையல்களை
வாங்கி வந்தேன்
வரும் வழியில்
ஒரு வளையல்
தொலைந்துவிட்டது!
தேடிப்பார் தோழி,
அது என்
இதயமாகக் கூட
இருக்கலாம்!

செல்லம்மா
சின்ன வயல் தாண்டி
செந்தாழம் பூச்சூடி
என் அருகே — நீ
ஏன் வந்தாய் சொல்லம்மா..

நிலாக் காலத்து மயக்கங்கள் என்ற தலைப்பில் வெளிவந்துள்ள ஆர். ச. சந்திரசேகரின் கவிதைத் தொகுப்பு நூலிலிருந்து சில பகுதிகள். பிரசுரம்: நர்மதா பதிப்பகம், 10, சோமசுந்தரம் தெரு, தி. நகர், சென்னை—600 017 விலை: ரூ. 7.50.

---

கார்டில் குறித்துவிடுகிற சாமர்த்தியமும் பல நர்சுகளிடம் உண்டென்று தெரிகிறது.

விலையுயர்ந்த மருந்துகள் தேவைப்பட்டால் டீன் அல்லது தலைமை மருத்துவ அதிகாரி கையெழுத்துப் போட வேண்டுமாம். அவர் கையெழுத்து வாங்குவதற்குள் போதும்டா சாமி என்று ஆகிவிடுவதாகக் கேள்வி. இதை மாற்றி, யூனிட் சீஃப் கையெழுத்துப் போட்டால் போதும் என்று வைத்தால் என்ன?

முக்கியமாக, நிர்வாகத் திறமை மிக்க நேர்மையான அதிகாரிகளைத் தலைமைப் பொறுப்பில் போட்டால் அரசு சற்று அக்கறை எடுத்துக் கொண்டால் தேவலாம். ஒரு கண்டிப்பும் கருணுமிக்க தலைமை அதிகாரி வெகு அழகாக நிர்வாகம் செய்து கொண்டிருந்தாராம். கண்டிப்பாவது, கருணாவது? அவரைத் தூக்கி கடாசி விட்டார்கள். மருத்துவமனைப் பணியாளர்களிடம் அதிருப்தி உண்டாகாமல் பார்த்துக் கொள்ளலாம். பதவி உயர்வு வருகிற சமயம் அவர்களில் தகுதியான ஒருவரையே உயர்த்தாமல், பே அண்ட் அக்கவுண்ட்ஸிலிருந்தும், செக்ரடேரியட்டிலிருந்தும், ஆட்களைக் கொண்டு வந்து இவர்கள் தலைக்கு மேல் போடும் போது, இவர்களுக்கு அக்கறை குறைந்து தான் போய் விடுகிறது.

ஜி. ஹெச். ஸில் நியூராலஜி பிரிவு, இதய சிகிச்சை பிரிவுகளில் குறைகள் பெரிதாகக் கண்ணில் படவில்லை. ஒரு நோயாளியின் உறவினரை விசாரித்த போது அவர் அரசாங்க உயர் அதிகாரி என்றும் அதனால் நல்ல கவனிப்பு இருக்கிறதென்றும் சொன்னார். எல்லாருக்கும் இந்தக் கவனிப்பு இருக்க பிரார்த்தனை செய்வோமாக!

ஆய்வு: **பிரியன், ஈஸ்வர்குமார், சந்திரமௌலி, சலன், சாருகேசி**

படங்கள்: **சுபா; கோவை ஸ்டுடியோ**

# தமிழகம் திரும்பிய தவமுனிவர்



"மதச்சார்பின்மை என்பதற்கு எம்மதமும் சம்மதம் என்று தான் பொருள்கொள்ள வேண்டுமே தவிர மதத்தைப் புறக்கணிப்பதல்ல" என்று அடிக்கடி கூறுவார் ராஜாஜி.

தமிழக அரசு இதைப் புரிந்து கொண்டு, நீண்ட காலத்துக்குப்பின் தமிழ்நாட்டில் மீண்டும் பாதம் பதித்துப் புனிதப்படுத்திய தவமுனிவருக்கு எல்லையில் வரவேற்பளித்தது கண்டு மகிழ்ந்து பாராட்டுகிறோம்.

தமிழக கோவில்களின் சார்பிலும் அரசின் சார்பிலும் பூர்ண கும்ப மரியாதையுடன் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி, ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி, ஸ்ரீ ஆனந்தேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. தாய்ப் பசுவைக் கண்ட கன்றுபோல் மக்கள் குதூகலித்தனர். அமைச்சர்கள் வீரப்பன், சௌந்தரராஜன், திருமதி சௌந்தரம் கைலாசம் ஆகியோர் உரையாற்றினர். "பெரியவாளைத் தரிசனம் செய்த பின் கடவுள் இல்லை என்று யாரால் கூற முடியும்?" என்று மனம் மாறியும் மனம் நெகிழ்ந்தும் பேசினார் திரு. சௌந்தரராஜன்.

பாத யாத்திரையாகவே பாரிவை வலம்வருகிற பரமாச்சார்யாள் கைத்தாங்கலாக பற்றிக்கொள்ளும் சைக்கிள் ரிக்‌ஷாவைச் சற்றுதூரம் தாமே இழுத்து வருவதைப் பாக்கியமெனக் கருதினார் அமைச்சர் வீரப்பன்.

பாரதத்தின் ஆன்மீகக் கேந்திரமாகத் தமிழகம் மீண்டும் சிறப்புப் பெறுகிறது. தமிழகத்திலிருந்து பரவும் இந்த ஆன்மீக ஒளி பூவுலகம் முழுவதும் பரவட்டும். உலக நலனுக்காகப் பெரியவர்கள் செய்யும்தவம் உணர்ந்து நம் உள்ளங்களைத் தூய்மைப்படுத்தி அடக்கத்தைப் பெறுவோம்.

படம்: இந்தியன் எக்ஸ்பிரஸ்


சாகடிக்கத்தான்
பலி கொடுத்திருப்பாங்க
எப்படியும் கொலைகாரர்களைக்
காஷ்மீர் விடுதலைப் படை
காட்டுமிராண்டி அரசியல்


முகமூடிக் கொள்ளைகள் தொடர்கின்றன!
மத்திய பட்டாளம்


தமிழக அரசு லட்ச ரூபாய்க்குப் பதிலாக கோடி ரூபாய்ப் பரிசு லாட்டரி டிக்கெட்டுகளை கவர்ச்சிகரமாக வெளியிடப் போகிறது!
ரூ1,00000
ரூ10000000
புரட்சித் தலைவரின் ஆட்சியில், ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்கிறேன்!



கல்கி

1984 பிப்ரவரி 19
ருத்ரோத்காரி மாசி 7
மலர் : 42 இதழ் : 29



# பூசாரியே, வரம் தாரும்!

அரசுடைமையான வங்கிகள் பெரிய தொழிலதிபர்களுக்கு மட்டுமின்றி நலிவுற்ற மக்களுக்கும் உதவி, அவர்கள் வாழ்க்கையை மலரச் செய்ய வேண்டும் என்பதில் யாருக்குமே அபிப்பிராய பேதம் இருக்க முடியாது. பெரிய, சிறிய தொழிலதிபர்களுக்கு பாங்குகள் உதவும்போது வேலை வாய்ப்புக்கள் பெருக, அதன் மூலம் நிச்சயம் சாமானிய மக்களும் பயனடைகிறார்கள். இருந்தாலும் சுயவேலை வாய்ப்பை உருவாக்கவும் விவசாயம் அல்லது கைத்தொழிலை அபிவிருத்தி செய்து கொள்ளவும் பாங்குகள் சாமானியருக்குக் கண்டிப்பாக உதவலாம்.

இந்தக் கடனைப் பெறும் ஏழை எளியவர்கள் அதைச் சாமர்த்தியமாகப் பயன்படுத்தி குட்டிபோடச் செய்து வட்டியையும் நாளடைவில் அசலையும் திருப்பித்தர வேண்டும். இப்படிச் செல்வம் செல்வத்தை ஈட்டும்போதுதான் நாட்டின் பொருளாதாரம் வளம் பெறும். அல்லாமல் ஏழைகளுக்குப் பண விநியோகம் செய்வது மட்டுமே காரியம். அத்துடன் அதை மறந்து விடலாம் என்றிருந்தால் பணவீக்கம் அதிகரிக்க, விலைவாசி உயர, ஏழைகள் மேலும் ஏழைகளாகி அவதிப்படுவதே நிகர லாபமாயிருக்கும்.

துரதிர்ஷ்டவசமாக நமது அரசு, ஏழைகளுக்கு வங்கிகள் வழங்கும் தொகையெல்லாம் இனாம் என்ற எண்ணத்தைத் தோற்றுவித்து வருகிறது. வோட்டுக்கள் பெறுவதற்காக ஏராளமான தொகைகள் விழாக்களில் வாரி வழங்கப்படுகின்றன. புதுதில்லியில் ராஜீவ் முன்னிலையில் ஆயிரக்கணக்கான மக்களுக்கு உதவித் தொகை வழங்கப்பட்ட பிறகு அமைச்சர்களும் மாநிலம் மாநிலமாகச் சென்று அன்னை இந்திரா சார்பில் தங்கள் வள்ளல் தன்மையைக் காட்டிக் கொண்டு வருகிறார்கள். கடைதேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைப்பது போல லட்சோபலட்சம் டெபாசிட்தாரர்கள் சிறுகச்சிறுகச் சேமித்து வைக்கும் பணம் இப்படி அள்ளிவிடப்படுகிறது. இவர்கள் அப்பனோ பாட்டனோ சேர்த்து வைத்த சொத்தை இப்படி தானம் பண்ணுவார்களா? டெபாசிட்தாரர்களுக்குக் கூடுதல் வட்டி தர மூக்கால் அழும் அரசு அவர்கள் பணத்தைத் தேர்தலைக் கருத்தில் கொண்டு தண்ணீராக இறைத்து வருகிறது.

மத்திய துணை நிதி அமைச்சர் பூசாரி கர்நாடக மாநிலத்துக்கு வந்தார். கடனுதவி பெற்ற ஒருவரிடம் ஜாமீன் கோரப்பட்டதா என்று வினவினார். ''ஆமாம்'' என்றார் அதிகாரி. ''அப்படியானால் மன்னிப்புக் கேளுங்கள்; இல்லையேல் விசாரணை!'' என்றார் அமைச்சர்! இன்னொரு பாங்கு அதிகாரியை திடீர் வேலை நீக்கம் செய்து விட்டார்! ஜாமீன் வற்புறுத்த வேண்டாம் என்றுதான் அரசு சுற்றறிக்கை கூறுகிறதே தவிர வாங்கவே கூடாது என்று சொல்லவில்லை. அவ்வாறிருக்க அதிகாரிகள் மீது பாய்வதில் என்ன அர்த்தம்? இதே நேரத்தில் நிதி அமைச்சர் பிரணப் முகர்ஜியோ, 'கடன் வசூலாகிற சதவீதம் மிகவும் குறைவாயிருக்கிறது: இதில் இன்னும் முன்னேற்றம் ஏற்பட வேண்டும்' என்று பாங்கு அதிகாரிகளுக்கு அறிவுரை வழங்கியிருக்கிறார். மத்தளத்துக்கு இரண்டுபக்கமும் அடி என்ற நிலையில் இருக்கிறார்கள் அதிகாரிகள்.

இந்தச் சூழலில் பாங்கு அதிகாரிகள் கூட்டணி மட்டுமின்றி பாங்கு டெபாசிட்தாரர்கள் சங்கமும் இன்றைய நிலைகுறித்துக் கவலை தெரிவித்து அறிக்கை விட்டிருப்பதை வரவேற்கிறோம்.

வரம் தருவாரா, பூசாரி?

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# அத்தியாயம் 16
# மந்திராலோசனை

நிலைசிறந்த ஒரு ராஜதந்திரியின் மகள் என்பதை அந்தக் கணத்தில் நிரூபித்தாள் கடம்பமாதேவி. ஆலோசனை மண்டபத்தின் தனிமையில் இதற்குள் புகுந்திருந்த அந்நால்வருக்கும் இடையூறு ஏதும் இல்லாதிருக்க பிரும்மாண்டமான கதவுகளை இரு காவலர்கள் வெளிப்புறமிருந்து இழுத்துச் சாத்தினர். உரையாடலின் இடைபுகுந்த கடம்பமாதேவி ஆதித்தனை ஏறிட்டு நோக்கி, ''சேர நாட்டின் யானைப் படைத் தலைவனைக் கடனாகக் கொடுத்து உதவ வேண்டும் என்று எங்கள் மன்னருக்குத் தாங்கள் தூது அனுப்பினால் சிரிப்பு வராமல் என்ன செய்யும்?'' என்றாள். சமயோசிதமாக அவள் பேச்சைத் திசை மாற்றியதற்காக நன்றியோடு அவளைப் பார்த்தனர் சேரனும், குலாந்தகனும்.

தாணுரவி அவள் எடுத்துக் கொடுத்த இடத்தில் பிடித்துக் கொண்டு விளக்கினான்: ''ஆம், நண்பரே! கப்பற்படை, ஒற்றர் படை உள்பட ஆறு படைகளுக்கும் மாதண்ட நாயகனாக விளங்குவது தவிர யானைப் படைக்குச் சேனாபதி பொறுப்பையும் நானே ஏற்றிருக்கிறேன். அதனால் தான் உங்கள் கோரிக்கை நகைப்பை உருவாக்கியது.''

''சேர நாட்டுக் குஞ்சர மல்லர்களுள் எங்கள் மன்னரை விஞ்ச யார் இருக்கிறார்கள்?'' என்று கேட்டாள் கடம்பமாதேவி.

''உங்களையே கடனாகக் கேட்டது பிசகு தான்'' என்றான் ஆதித்தன், இலேசான வருத்தம் எட்டிப்பார்த்த புன்னகையுடன். ''நண்பரே! நீங்கள் என்னைத் தவறாக எண்ணக் கூடாது. உங்களுடன் படையெடுப்பில் கலந்து கொண்டு பக்க பலமாக நிற்க நான் சித்தமாக மட்டுமில்லை, துடிப்புடன் இருக்கிறேன். ஆனால் அதை நீங்கள் விரும்புவீர்களா என்றுதான் எனக்கு ஐயமாயிருக்கிறது.''

''தங்கள் பெருந்தன்மையை மெச்சுகிறேன், மன்னவா! என்றாலும் தாங்கள் என்னுடன் வடதிசைக்கு வருவது உசிதமில்லை என்றே தோன்றுகிறது.''

''நானும் அவ்வாறுதான் நினைத்தேன். அதனால் அதற்கு அடுத்தபடியான சிறந்த ஏற்பாடாகக் குலாந்தகனை உங்களுக்குக் கடனாக வழங்க உடன் அழைத்து வந்தேன். எனக்கு இணையான மாவீரன். போர்யானைகளைப் பற்றியும் அவற்றை யுத்தங்களில் திறம்படப் பயன்படுத்திக் கொள்வது குறித்தும் சகலமும் அறிந்தவன்'' என்ற சேரமான், ''குலாந்தகா!'' என்று அழைத்து, ''மன்னரை வணங்கு'' என்று ஆக்ஞாபித்தான்.

ஆதித்தன் முன் மண்டியிட்டு கரம் கூப்பிய குலாந்தகன் சொன்னான்: ''பிரபோ! என்னைத் தங்களுக்கு முன்பின் தெரியாது. எனக்கும் தங்களைத் தெரியாது. ஆனால் நம் இருவருக்குமே சற்றுமுன் தங்கள் மகன் கன்னரதேவன் உருக்கமாகப் பாடிய அப்பர் சுவாமிகளின் தேவாரம் தெரியும். அதையே மறுபடி கூறி என்னைத் தங்களுக்கு அர்ப்பணித்துக் கொள்ள விரும்புகிறேன்...''

''அப்பனே! எழுந்திரு!'' என்றான் ஆதித்தன். அவன் தோள்களைப் பற்றி உயர்த்தினான். ''அந்தப் பாடலையும் அதன் பொருளையும் நான் நன்கு உணர்ந்தவன் தான் என்றாலும் நீ இன்னொரு முறை பாடக் கேட்பதில் ஆட்சேபணை இல்லை. நாவுக்கரசர் பாடலை எத்தனை முறை கேட்டால்தான் என்ன? அலுக்கவாபோகிறது?''

''ஐயா! எனக்கு இசை தெரியாது. பாடவும் வராது. ஆனால் பதிகத்தைச்சொல்கிறேன். அதையே எனது சத்தியப் பிரமாணமாகவும், விசுவாச உறுதி மொழியாகவும் ஏற்க வேண்டும்'' என்ற குலாந்தகன் தொடர்ந்தான்:

''என்னை ஏதும்
    அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும் முன்
    ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன் அடி
    யான் என்(று) அறிதலும்
தன்னை நானும்பி
    ரான்என் றறிந்தேனே!''

''ஏற்றுக் கொண்டேன் அப்பனே!'' என்றான் ஆதித்தன். ''நீ என் அடியான்என்பதை அறிந்தேன். நீயும் என்னைப் பிரானென அறிந்தாய். நல்லது. ஆனால் பாடலின் முதல் அடிகளில் உன்னை நான் முன் ஏதும் அறிந்திருக்கவில்லை என்றாயே அதைத்தான் ஏற்க முடியவில்லை!'' என்று மாமன்னர் கூறவும் துணுக்குற்ற குலாந்தகன் அடுத்து வந்த வார்த்தைகளில் ஆறுதல் பெற்றான். ''வெகு நாட்களாக, என் முந்தைய பிறவிகளிலே கூட உன்னை அறிந்திருப்பது போல் மனத்தில் ஒரு பிரமை ஏற்படுகிறது.'' கண்களில் நீர்மல்கக் குலாந்தகனை அன்புடன் தட்டிக் கொடுத்தான் ஆதித்தன்.

அவர்களிடையே உணர்ச்சிப் பெருக்கினை நீடிக்க விட விரும்பாதவன் போலத் தாணுரவி, ''கடம்பமாதேவியையும் உங்களுக்கு முறையாக அறிமுகப்படுத்த விரும்புகிறேன்'' என்றான். ''பல ஆண்டுகளுக்கு முன் கங்க தேசத்திலிருந்து சேர நாடு வந்து சேர்ந்தவர் இவள் தந்தை வருணீச பண்டிதர். என் அவைக்கு மதிப்புச் சேர்த்த ஆமாத்தியருள் முதன்மையானவர். போர்த்தந்திரங்களை நுணுக்கமாக ஆராய்ந்து உணர்ந்த பேரறிஞர். பூர்வீகம் கங்க நாடு என்றாலும் சேர நாட்டையே தாய் நாடாக ஏற்றவர். அவர் மரணம் எனக்குப் பெரிய அதிர்ச்சியாக இருந்தது. தமது அறிவாற்றலுக்கெல்லாம் தமது மகளை அவர் வாரிசாக்கிச் சென்றிருக்கிறார் என்பது நாளடைவில் தெரிய வந்தது. மனம் சற்று அமைதியுற்றது. இவளும் உங்களுக்கு உதவ முடியும் என்பதால் உடன் அழைத்து வந்தேன்.''

''மகிழ்ச்சி'' என்றான் ஆதித்தன். ''அப்படியானால் இவ்விருவர் முன்பும் மனம்


கி.ராஜேந்திரன்
அபிமானவல்லி
லதா

விட்டு நான் ஒளிவு மறைவின்றி பேசலாம் என்கிறீர்கள்!''

''தாராளமாக'' என்றான் சேரமான். ''இல்லையென்றால் ஆலோசனைக் கூடத்துக்குள் இவர்களை அனுமதித்திருக்கவே மாட்டேனே!''

''நல்லது அமர்ந்து கேளுங்கள்'' என்று அவரவருக்குரிய இருக்கைகளைச் சுட்டிக் காட்டிய ஆதித்தன், ''என் தகப்பனார் காலத்திலிருந்தே நான் திட்டமிட்டு வரும் படையெடுப்பு இது'' என்ற பூர்வ பீடிகையுடன் திருப்புறம்பயப் பெரும்போரை நினைவூட்டினான். அந்தப் போரின் முடிவில் பாண்டியன் வரகுணனை வெற்றி கொண்ட பல்லவன் அபராஜிதன் தனக்குப் பக்கபலமாக நின்று போரிட்ட ஆதித்தனிடம் நன்றி பாராட்டி நெகிழ்ந்ததைச் சொன்னான். பாண்டியன் தோற்றோடவும் அது வரை பாண்டியன் வசமிருந்த சோணாட்டுப் பகுதியுடன் பல்லவர் வசமிருந்த சோணாட்டுப் பகுதியையும் சேர்த்து ஆதித்தனிடமே ஒப்படைத்து 'ஆண்டு கொள்' என்று கூறிக் காஞ்சி திரும்பியதை எடுத்துரைத்தான். மேலும் தொடர்ந்து பேசினான் ஆதித்தன்:

''இதனால் என் தந்தை விஜயாலயன் பெருமையுற்ற போதிலும் அபராஜிதனின் தந்தை நிருபதுங்கவர்மன் தன்னை முன்னம் ஒருமுறை – அதாவது அரிசிலாற்றங்கரைப் போரில் – வஞ்சித்ததை அவர் மன்னித்தாரில்லை. அப்போது காஞ்சியை என்றேனும் ஒருநாள் கைப்பற்றிப் பல்லவப் பேரரசையே பூண்டோடு அழிப்பதாகச் சபதம் எடுத்திருந்தார். அதையும் விஜயாலயன் மறந்தாரில்லை. எனவே சோணாடு முழுவதுமே எமது ஆளுகைக்கு உட்பட்டதிலும் திருப்தியுறாமல் பல்லவ ராஜ்யத்தின் மீதே நான் படையெடுத்து அந்நாட்டைக் கைப்பற்ற வேண்டும் என்று கூறி வாக்குறுதியும் பெற்றார். நானும் நோய்ப் படுக்கையில் இருந்த அவர் முன்பு வேறு வழியின்றி ஒப்புக்கொண்டேன். இதன் பிறகு ஓராண்டுக்குள் என் தந்தை விஜயாலயன் காலமாகி விட்டார். அரியாசனம் ஏறிய நான் விரிவடைந்து விட்ட சோணாட்டின் எல்லைகளைப் பலப்படுத்துவதிலும் என் ஆட்சியை நிலைநாட்டிக் கொள்வதிலும் ஓர் வல்லரசு மீது படையெடுக்கத் தேவையான படைபலத்தைப் பெருக்கிக் கொள்வதிலும் பத்தாண்டுக் காலத்தைக் கடத்தி விட்டேன். உண்மையில் இவ்வளவு தாமதத்துக்கு இன்னொரு காரணமும் உண்டு. என்னிடம் எவ்வளவோ பெருந்தன்மை காட்டி நடந்து கொண்ட பல்லவேந்திரர் மீது படையெடுக்க என் மனச்சாட்சி இடம் தராமல் உறுத்தியதுதான் அந்தக் காரணம். அந்தத் தயக்கத்தையும் படிப்படியாக வெற்றி கொண்டு தந்தைக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றும் துணிவை இன்று பெற்றுள்ளேன்'' என்று ஒளிவு மறைவின்றிக் கூறி முடித்தான் ஆதித்தன்.

''மகன் கன்னரதேவன் வாரிசாக, வளர்ந்திருப்பதும் படையெடுப்பை நிகழ்த்த தைரியமளித்திருக்குமே'' என்றான் தானுரவி.

''மெய்தான்'' என்றான் ஆதித்தன்.

''பின்னணியைப் புரிந்து கொண்டோம். இனி நடக்க வேண்டியதைப் பேசுவோம்'' என்றான் குலாந்தகன்.

''படையெடுப்புக்கு நாள் குறித்தாயிற்று. தங்களைச் சந்தித்து விடை பெறத்தான் காத்திருந்தேன்'' என்றான் ஆதித்தன் தானுரவியை நோக்கி. ''எனக்குக் கவலையளிப்பதெல்லாம் ஒரே ஒரு சிந்தனைதான். முன்னர் திருப்புறம்பயத்தில் தோற்றோடிய வரகுணனின் சகோதரன் பராந்தக வீர நாராயணன் பாண்டி நாட்டில் இன்று அரியணை ஏறி அரசாண்டு வருவது உங்களுக்கெல்லாம் தெரியும். நான் வடதிசைப் படையெடுப்பு நிகழ்த்தும் போது வரகுணன் முன்னம் இழந்த சோணாட்டுப் பகுதிகளை இவன்

திரும்பக் கைப்பற்ற முயல மாட்டான் என்பது என்ன நிச்சயம்?''

''அதற்காகத்தானே நான் உங்களுடன் படையெடுப்பில் கலந்து கொள்ளாமல் பின் தங்கியிருக்கிறேன். கவலையின்றி சென்று வாருங்கள்; வென்று திரும்புங்கள். பாண்டியன் சோணாட்டை நோக்கி விரலசைக்கவும் துணிய மாட்டான். அப்படியே அசட்டுத்தனமாக ஏதும் நடந்து கொண்டாலும் பாடம் கற்பிக்க நானிருக்கிறேன்.''

''நண்பரே! இந்த உறுதிமொழியை இதற்கு முன்பும் பலமுறை எனக்களித்திருக்கிறீர்கள். அதற்காக நன்றி பாராட்டுகிறேன். ஆனால்...''

''ஆனால்...?''

''என் உள்ளத்தில் உறுத்திக் கொண்டிருக்கும் ஓர் எண்ணத்தை நான் வெளியிட்டால் தாங்கள் தவறாக...''

''எடுத்துக் கொள்ள மாட்டேன்'' என்று ஆதித்தனை முடிக்க விடாமல் தானே பேசினான் தாணுரவி. ''நீங்கள் என்ன சொல்ல வந்து பேச முடியாமல் தயங்குகிறீர்கள் என்பதையும் நான் ஊகித்து விட்டேன். பராந்தக வீர நாராயணனின் பட்டத்தரசி சேரர் குலத்தில் உதித்தவளாயிற்றே என்று யோசிக்கிறீர்கள், அதுதானே? பாண்டியனோடு உறவு முறையால் நான் பிணைக்கப்பட்டுள்ள போது அவன் சோணாட்டின் சில பகுதிகளைக் கவர எண்ணினால் அதை எதிர்த்து என்னால் வன்மையாகச் செயல்பட முடியுமா என்று கலங்குகிறீர்கள். அப்படித்தானே!'' புன்னகையுடன் தாணுரவி கேட்கவும் ஆதித்தன் தலைகுனிந்தான்.

''நண்பரே தங்களைச் சோதனைகளில் ஆழ்த்த நான் விரும்பவில்லை.''

விருட்டென்று எழுந்து நின்று பேசலுற்றான் தாணுரவி. ''ஆதித்தா! நான் கூறுவதைக் காது கொடுத்துக் கேட்டுக்கொள். வானவன் மாதேவியை பராந்தகன் வீர நாராயணனின் பட்டத்தரசியாக்கியதன் மூலம் எங்களிடையே உறவு முறை உருவாகி இருப்பது உண்மை. ஆனால் அதே நேரத்தில் நம்மிருவரிடையே நட்புறவு மிக நெருக்கமாக வளர்ந்து முதிர்ந்திருப்பதைப் பாண்டியன் அறிவான். அப்படித் தெரிந்திருந்தும் அவன் நம்மிடையே நிலவும் நட்புறவை சோதித்துப் பார்க்கத் துணிவானானால் எங்களிடையே உள்ள உறவு முறையைச் சோதித்துப் பார்க்க நானும் தயங்க மாட்டேன். பாண்டியனுக்கும் எனக்கும் இடையே உள்ள உறவு சோணாட்டின் மீது அவன் படையெடுப்பதைத் தடுக்க வேண்டுமே தவிர தூண்டி விடக் கூடாது. இதை அவன் உணரவில்லையானால் இரட்டிப்புத் தவறு செய்தவனாகிறான். அது அவனுடைய துர்ப்பாக்கியமாக விளங்கும். தண்டிக்காமல் விடமாட்டேன் அவனை. இது சத்தியம்!''

விழிகளில் நீர் ததும்பி வழிவதைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாது உணர்ச்சிப் பரவசமான ஆதித்தன், துள்ளி எழுந்து வந்து தாணுரவியை ஆரத் தழுவினான். ''நண்பரே! எனக்கு என்ன மறுமொழி சொல்வதென்றே தெரியவில்லை. உங்கள் பெருமனத்தால் என்னை ஊமையாக்கிவிட்டீர்கள்!''

இருபேரரசர்களும் ஆலிங்கனம் செய்து கொண்டு நிறைந்த உள்ளத்துடன் மகிழ்ச்சி மீதூற நிற்பதைக் கண்டு பூரித்துப்போன குலாந்தகனும் கடம்பமாதேவியும் ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகை பூத்தனர்.

''கடம்பமாதேவி! நீ என்ன நினைக்கிறாய்? நாங்கள் வடதிசையில் படையெடுத்துச் செல்கையில் கொங்கு நாட்டிலிருந்தும் ஏதேனும் தொல்லை நேரக் கூடுமா?'' என்று கேட்டான் குலாந்தகன்.

''அப்படியொன்றும் நான் எதிர்பார்க்கவில்லை. என் அனுமானம் பொய்த்தாலும் வருகின்ற ஆபத்து சேரமானால் சமாளிக்க முடியாததாக இருக்கப் போவதில்லை. என்னுடைய சிந்தனையெல்லாம் வடக்கே



படையெடுத்துப் போய்ப் பல்லவேந்திரரை வெற்றி கொள்ளும் அளவில் சோழப் பேரரசரின் படைபலமும் போர்த்திறமும் இருக்கிறதா என்பது பற்றித்தான்!''

சினத்துடன் வியப்பும் போட்டியிடத் திரும்பிப் பார்த்தான் ஆதித்தன். 'தன் ஆற்றலையே சந்தேகிக்கத் துணிகிறாளே இவள்!'

அவன் கண்களிலேயே அவன் மனப் போக்கைப் படித்து விட்ட கடம்பமாதேவி, ''சோழப் பேரரசர் கோபிக்கக் கூடாது'' என்றாள். ''குறை காண்பது என் நோக்கமல்ல. உங்கள் வெற்றியை உறுதி செய்யவே எங்களை அழைத்து வந்திருக்கிறார் சேரமான்.''

''பெண்ணே! எனது பிரம்மாதிராஜர்கள் அனைவரும் பழையாறையில் கூடி ஐந்து தினங்கள் விவாதித்துப் போர்த் திட்டம் வகுத்திருக்கிறார்கள். அது தோல்வியுறக் காரணமே இல்லை.''

''நல்லது. தங்கள் பிரதம தளபதியாகக் குலாந்தகன் இப்போது இயங்கட்டும். உங்கள் திட்டப்படி படைகளை நகர்த்தட்டும். நான் அபராஜிதன் நிலையிலிருந்து பல்லவ நாட்டைக் காப்பாற்றிக் கொள்கிறேன்!'' என்ற கடம்பமாதேவி, தான் கொண்டு வந்திருந்த ஒரு சுருக்குப் பையிலிருந்து மெல்லிய தோலினாலான ஒரு வரைபடத்தை எடுத்து அருகிலிருந்த ஓர் அலங்கார பீடத்தின் மேல் விரித்தாள். அதில் நதிகளும் பிரதான நகரங்களும் நாடெல்லைகளும் சாலைகளும் கோடுகளாகவும், புள்ளிகளாகவும் வரையப் பட்டிருந்தன. யானை, குதிரை வடிவங்களில் சிறிய மரப் பொம்மைகளையும் சுருக்குப்பையைப் பிரித்து உதறிக் கொட்டினாள். ஆதித்தன் மிகுந்த வியப்பும் ஆர்வமுமாய் அந்தப் போர் விளையாட்டில் கலந்து கொண்டான். குலாந்தகனுக்குத் தனது பிரம்மாதி ராஜர்கள் வகுத்த திட்டத்தை ஆதித்தன் விளக்க, அவனும் அதற்கேற்ப வெள்ளை நிறத்தில் நாற்படைகளையும் குறிக்கும் பொம்மைக் காய்களை நகர்த்தினான். பீடத்தின் மறுபுறத்திலிருந்த தாணுரவி, கடம்ப மாதேவியின் யோசனைக்கிணங்க கருநிற பொம்மைக் காய்களை நகர்த்தி வந்தான். வெகு சீக்கிரமே சோழனின் போர்த் தந்திரத்தைப் பல்லவேந்திரனால் மிக எளிதில் முறியடித்து விட முடியும் என்பது புலனாயிற்று!

வலக்கரத்தை முஷ்டியாக்கி இடக்கரத்தில் ஓங்கிக் குத்தி அடி உதட்டை அழுந்தக் கடித்தான் ஆதித்தன். இரண்டாவது முறையாக அன்று அவன் தலை தொங்கிப் போயிற்று.

''என் போர்த் தந்திரம் என்ன என்பதைப் படிப்படியாக நீ இங்கே தெரிந்து கொண்டு அதற்கேற்ப காய்களை நகர்த்தி வென்றாய். ஆனால் பல்லவனுக்கு முன்கூட்டி எதுவுமே தெரியப் போவதில்லை. திடீரென்று நடக்கும் படையெடுப்பு அவனைத் திக்குமுக்காடச் செய்யும். மேலும் அவனுக்கு ஆலோசனை வழங்க காஞ்சியில் ஒரு கடம்ப மாதேவி இல்லை!''

''பிரபோ! எதிரியின் ஆற்றலைக் குறைத்து மதிப்பிடுவது தற்கொலைக்குச் சமம்'' என்றாள் கடம்ப மாதேவி. பல்லவேந்திரரின் ஒற்றர்கள் உங்கள் படை திரட்டும் முயற்சிகளை இதற்குள் அவருக்குத் தெரிவித்திருப்பார்கள். அப்படியே இல்லை என்றாலும் பல்லவனின் எல்லைக் காவல் படையினர் தங்கள் படையெடுப்பைக் கண்டதுமே அவசரமாகத் தகவல் அனுப்பி மன்னரை எச்சரித்து விடுவார்கள். எந்தத் திக்கிலிருந்து எவ்வகைப் படை முன்னேறி வருகிறது என்பதை வைத்தே வியூகத்தை கணித்து அதை உடைக்கும் உபாயத்தையும் பல்லவேந்திரர் உருவாக்கி விடுவார். அவர் அவையில் என்னை விடவும் போர்த் தந்திரங்களில் தேர்ந்த அறிஞர்கள் இருக்கக்கூடும்.''

''இப்போது நான் என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?'' என்றான் ஆதித்தன் எரிச்சல் எட்டிப் பார்த்த குரலில்.

''சொல்கிறேன்'' என்ற கடம்பமாதேவி முற்றிலும் புதியதொரு போர்த்திட்டத்தை வகுத்து விளக்கினாள். கேட்கக் கேட்க மற்ற மூவரும் வியப்பில் விரிந்த கண்களால் அவளை நோக்கியபடி இருந்தனர்.

(தொடரும்)

# "காம்ப்ளான்® ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள் சாப்பிடத் தவறி விடும் என் கணவருக்கு"



"சாப்பிடும்போது சண்டித்தனம் செய்யும் என் மகனுக்கு"



"நோயுடல் தேறிவரும் என் தாயாருக்கு"

## காம்ப்ளான்® ஒன்றுதான் எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.



"அசதியினால் சரிவர சாப்பிட முடியாத எனக்கு"

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போ-ஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்-பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக — சாக்கலேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், ஸ்ட்ராபெர்ரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்.




## திட்டமிட்ட பரிபூரண உணவு
# காம்ப்ளான்®

-GLC. 10-2015 TM

## 6

'என்ன வந்தாலும் ஏற்க வேண்டியது தான்' என்கிற முடிவுக்கு வந்துவிட்டாள் தாரா.

இந்த அவமானத்திலிருந்து தான் தப்பிக்க வேண்டும் என்கிற விதியிருந்தால் –தப்பிப் பது... இல்லாவிடில், கோர்ட், சாட்சி என்று போலீஸ் இழுத்தடிப்பதற்கு முன்பே எதையாவது தின்று பிராணனை விடுவது–...

அன்று காலே – இவள் ஆபீசுக்குப்போன போது... உள்ளே நுழையவே முடியாத வாறு கும்பல்... தெருவை அடைத்த வாறு ஐந்தாறு கார்கள், ஆம்புலன்ஸ், போலீஸ் ஜீப்...

கால்கள் பின்ன உள்ளே நுழைந்தவள்– அப்பொழுதுதான் ஸ்ரீதரின் சடலம் ஆம்பு லன்ஸில் ஏற்றப்படுவதற்காக · எதிரில் கொண்டு வரப்படுவதைக் கண்டு, விக்கித்து நிற்கிறாள்.

அவனது தலே, பிடிப்பில்லாது துவண்டு தொங்கிக் கொண்டிருக்க... கழுத்துச் சங்கிலி, ராஜாவுடன் நடத்திய போராட் டத்தில் அறுபட்டு, தங்க நிறத்தின் மேல் ரத்த முலாம் பூசப்பட்டு, சங்கிலியின்டாலர் மட்டும் அவனின் கன்னப் பகுதியில் உரசிய படி...

சிகப்பு நிற இதழ் வடிவ டாலர் –அந்தக் கன்னத்தில் பட்டு அசைவதே, ஒரு விதப் பரிதாபத்தை உண்டு பண்ணுவதாய்....

ஒரு பெண்ணின் கடைசி முத்தத்தைப் போல...

''ஐயோ...''

தாரா, நெஞ்சை ஒரு கையால் பிடித்த படி நிற்கிறாள். இவளைக் கண்டதும், ரமா மணி, கூட்டத்தினூடே புகுந்து –இவளரு ளருகில் வருகிறாள்.

''நேத்து சாயந்திரம் நடந்திருக்கு...''

''.......''

''யாரோ திட்டம் போட்டுச் செஞ்சிருக் காங்க... பாவம், எம். டி. யைப் பார்க்கச் சகிக்கலே. ஒரே பையன்...''

''.......''

''இன்ஸ்பெக்டர் எல்லாரையும் நிறுத்தி வச்சுக் கேள்வி கேட்டிருக்காரு....''

தாரா, ரமாமணியின் கையை இறுகப் பிடித்துக் கொள்கிறாள்... உள்ளங்கையில் வியர்வைப் பிசுபிசுப்பு, அவளது பயத்தைத் தெரிவிக்கும் வகையில்...

ரமாமணி, தாராவை நிமிர்ந்து பார்க் கிறாள்.

''ஐயோ அசடு... நீ எதுக்கு இப்படி நடுங்கிச் சாகறே...''

''ஒண்...ணுமில்லே...''

''இப்பத்தான் வாட்ச்மேனை விசாரித்து முடிச்சாங்க... என்னை அப்பவே ஆயிரம் கேள்வி கேட்டுத் துளைத்தெடுத்தாச்சு.... வாட்ச்மேனோட ஸ்டேட்மெண்ட்ப்படி ராஜா தான் இந்தக் கொலையைச் செஞ்சிருக்க ணும்னு தோணறது... அவன் ஃ குடிச் சிட்டு, ஆபீஸ் உள்ளே நுழையறப்ப – அவனை மோதித் தள்ளற மாதிரி, வேகமா ராஜா வெளியே ஓடியிருக்கானும்... இவன் என்னமோ ஏதோன்னு உள்ளே – எம்.டி. ரூமுக்குள்ள போய்ப் பார்த்தா... கன்ருவி.. வாட்ச் மேன்தான் உடனேயே போலீசுக்கும், எம். டி.க்கும் தகவல் தெரிவிச்சிருக்கானும்.. எங்களுக்கெல்லாம் காலம்பற – இதோ இப்பத்தான் நியூஸ் தெரியும்....''

இவள், தாராவின் காதோடு கிசுகிசுத்துக் கொண்டிருந்த போதே – ஒரு கான்ஸ்டபிள், இவளை அழைக்கிறான்.

''ஐயா கூப்பிடறாரு... வாங்க...''

தாரா ஆணியடித்தாற் போல, நிற்கிறாள்.

''போயேன்... என்ன பயம்... கேட்ட கேள்விக்கு, 'பளிச்'சென்று பதில் சொல் லிட்டு வந்திடு...''

ரமாமணி, இவளது முதுகில் கையைவைத்து முன்னுக்குத் தள்ளுகிறாள்.

இன்ஸ்பெக்டரின் எதிரில் போய் நின்ற தாரா, எச்சிலைக் கூட்டி விழுங்கிக் கொள் கிறாள்.

''உங்க பேர் என்ன...''

# சொல் நின்று வேண்டும்



''தாரா...''

''எத்தனை வருஷமா இங்கே வேலை செய்யறீங்க...''

''இப்பத்தான் நாலு மாசமா....''

''மிஸ்டர் ஸ்ரீதரை உங்களுக்கு எவ்வளவு நாளாத் தெரியும்...''

''வேலைக்குச் சேர்ந்ததுலேயிருந்து....''

''அவர் உங்க கிட்டே எப்படிப் பழகுவார்...''

–இந்தக் கேள்விக்கு என்ன பதிலைச் சொல்வது என்றே புரியாமல் திகைக்கிறாள்அவள்.

''சொல்லுங்க... அவர் உங்ககிட்டே எப்படிப் பழகுவார்...''

தாராவின் கண்ணெதிரில் பாபு வந்து நிற்கிறான். முகத்தில் என்னும் கொள்ளும் வெடிக்க, சிகரெட்டை உதட்டில் தொத்த வைத்தபடி, பாபு அவளைப் பார்த்து உறுமுவது போல...

''சொல்லேண்டி... என்ன தயக்கம்...''

அவ்வளவுதான் தாரா, பனிரெனப் பதிலளிக்கிறாள்.

''அப்பப்போ வேலை விஷயமாய்ப் பேசுவார்... பிஸினஸ் சம்பந்தமா, யாராவது இவரைப் பார்க்க வர்றதா இருந்தா என்னை விட்டு விருந்துக்கு ஏற்பாடு பண்ணுவார். அத்தனைதான்.''

ஓ...

இன்ஸ்பெக்டர் அவளைத் துளைப்பதுபோலப் பார்க்கிறார்.

''நேத்து எத்தனை மணிக்கு நீங்க ஸ்ரீதரை பார்த்தீங்க...''

''ஆபீஸ் விட்டுப் போறதுக்கு முன்னாடி..''

''அப்போ ஆபீஸ்லே யாரெல்லாம் இருந்தாங்க...''

அவள் யோசிப்பதற்குள், வாட்ச்மேன் இடையில் புகுந்து பேசுகிறான்:



''இவங்க போறப்ப நான் இருந்தேங்க... ராஜாவும் இருந்தாரு... இவங்க கிளம்பிப் போனதுக்கு அப்புறமாத்தானே நானும் ராஜாவுமா வெளியே கிளம்பினோம்...''

தாரா, அவனை அதிர்ச்சியுடன் பார்க்கிறாள்.

சந்தேகமேயில்லே. தெய்வம் அவள் பக்கத்தில் தான் இருக்கிறது...

முதல் நாள் மாலையில் — அலுவலக நேரம் முடிந்த பின் — எல்லா இருக்கைகளும் காலியான சமயத்தில் — தாராவும் ஹாலை விட்டு வெளியேறினாள் அப்பொழுது — இதே வாட்ச்மேன், ஹாலின் ஒரு மூலையில் நின்றபடி ஏதோ ஒரு பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தான்.

தாரா, ஹாலை விட்டு வெளியேறியதைத்தான் அவன் பார்த்தானே தவிர, ஹாலை ஒட்டினாற் போல இருந்த குளியலறைக்குள் புகுந்து, கதவைத் தாழிட்டுக் கொண்டதை கவனிக்கவே இல்லை.

அவன் வரையில் — தாரா வீட்டுக்குப் கிளம்பி விட்டாள்.

'இது எத்தனை பெரிய அதிர்ஷ்டம்...'

தாரா, உடம்பைச் சிலிர்த்துக்கொண்டு, நிமிர்ந்து நிற்கிறாள்.

அதற்குள், கான்ஸ்டபிள், வாட்ச்மேனை அதட்டுகிறான்.

''இந்தா, உன்னைக் கேட்கறப்ப பதில் சொல்லு... போதும்...''

இதற்கு மேல் தாரா, புதுத்தெம்புவந்தவளாக, அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் மளமளவெனப் பதிலளிக்கிறாள்.

வீட்டுக்காரர்: ''இந்தாப்பாபோஸ்ட் மேன்! எனக்கு வந்த லெட்டரை பக்கத்து வீட்டுக்கும், பக்கத்து வீட்டுக்கு வந்த லெட்டரை எனக்குமாக நேற்றுக் கொடுத்தாய். இன்றும் அப்படியே செய்கிறாயே.''

போஸ்ட்மேன்: ''இதுக்குப் போய் ஏன் சார் வருத்தப்படறீங்க? தபாலே இப்படிக் கொடுங்க. அட்ரஸை மாற்றி எழுதித் தரேன்!''

—ஆர். எஸ். சுப்பிரமணியன்.



''வாட்ச்மேன் சொன்ன மாதிரி, நான் எல்லாரும் கிளம்பறப்பவே கிளம்பிட்டேன் சார். ஏதாவது வேலே இருந்தாத்தான் இருப்பேன்... இல்லேன்னு கிளம்பிடுவேன். எங்க வீடு ஆழ்வார்பேட்டையிலே இருக்கு.''

''நீங்க கிளம்பறப்ப மிஸ்டர் ராஜா இங்கேயிருந்தாரா...?''

''அதெல்லாம் நான் கவனிக்கல்லே சார்...''

''ராஜாவுக்கும், கிரிதருக்கும் ஏதோ மனஸ்தாபம்னு இங்கே வாட்ச்மேன் சொன்னான். உங்களுக்கு அதைப் பத்தி ஏதாவது தெரியுமா...?''

''தெரியாது சார்...''

''சரி... நீங்க போகலாம்...''

இன்ஸ்பெக்டர் கிளார்க் சுதர்ஸனம்பக்கம் விழிகளைத் திருப்ப, பெருத்த நிம்மதியுடன் ரமாமணியின் பக்கத்தில் வந்து நிற்கிறாள் தாரா.

'விஷயம் இத்தனை சுலபமாக முடியும் என்று அவள் எதிர்பார்க்கவே இல்லையே...'

அவள், ரமாமணியைப் பார்த்து மெள்ளத் தலையை அசைக்கிறாள்.

''கிளம்பலாமா...''

''இரு... விசாரணை முடிஞ்சு, எல்லோரையும் போகச் சொன்னாலொழிய நாம் இடத்தை விட்டு அசையக் கூடாது...''

அன்று நடுப்பகல் வரையில் விசாரணை நடந்தது... போலீஸ், கையில் இஞ்ச் டேப்புடன் அலைந்து கொண்டிருந்தது...

கொலே நடந்த இடத்திலிருந்து — கொலையாளி தப்பி ஓடிய வாசற் பக்கம் வரையில் அளந்து பார்த்துக் கொண்டிருந்தது.

எம். டி. யின் அறை, கிரிதரின் சடலத்தை அப்புறப்படுத்தியது முதலே — போலீசாரால் பூட்டி வைக்கப்பட்டது...

'எந்த நேரமும் மறுபடியும் விசாரணைக்காகக் கூப்பிடுவோம்' என்கிற கட்டளையுடன், ஊழியர்கள் வீட்டுக்கு அனுப்பி வைக்கப்பட்டார்கள்...

தாரா, ரமாமணியுடன் சேர்ந்து பஸ் ஸ்டாப்பை நோக்கி நடையைக் கட்டுகிறாள்.

''இன்னும் என்ன விசாரணை வேண்டிக் கிடக்கு...''

—தாரா இழுத்தாற் போலச் சொல்ல, ரமா மணி ஒரு குழந்தையைப் பார்ப்பது போல இவளைப் பார்த்துச் சிரிக்கிறாள்.

''என்ன இப்படிக் கேட்டுட்டே...போலீஸ் அத்தனை சீக்கிரத்தில எல்லாத்தையும் மூட்டை கட்டி வச்சுடுமா... இன்னும் எத்தனை சம்பிரதாயச் சடங்கெல்லாம் இருக்கு.. ராஜாதான் இந்தக் கொலேக்குக் காரணம்னு நிச்சயமாத் தெரிஞ்சாலும், அவன் தலைமறைவாயிட்டாங்கிறதாலே அவன்தான் குற்றவாளின்னு சொல்லிட முடியுமோ... இப்பத்தான் — கிரிதரை எடுக்கறதுக்கு முன்னாலே போட்டோவெல்லாம் எடுத்திருக்காங்க... ஃபிங்கர் பிரிண்ட்ஸ் வந்தாகணும்... பார்க்கலாம். போகப் போகத் தானே கேஸ் எந்த ரூட்லே போறதுன்னு தெரியும்...''

மறுபடியும் தாராவின் நெஞ்சில் ஒருகல்..

## நிமிடத்திற்கு 10,000 க்கும் மேற்பட்ட சுழல் வேகத்தில் ஒரு மிக்ஸரின் நீடித்த உழைப்பிற்கு உத்தரவாதம் தர உங்களால் முடியுமா?

## அதற்கு நாங்கள் வாக்குறுதி அளிக்கிறோம்.

நிமிடத்திற்கு 10,000க்கும் மேற்பட்ட சுழல் வேகத்தில் மிக்ஸர்கள் தொடர்ந்து இயங்கும் போது எத்தனையோ நடக்கலாம். பொறுமை எல்லை மீறலாம். மிக்ஸரின் மோட்டார் எரிந்து போகக்கூடும். பிளேடுகள் கழன்று அபாயகரமான ஆயுதங்களாக மாறலாம். இந்த ஆபத்துக்களை தவிர்க்க ஒரே வழி, மிக்ஸர் வாங்க ஆலோசிக்கு முன்னரே நம்பகமான பெயர்ச் சின்னத்தை தேடிக் கண்டுபிடிப்பதுதான்.

உதாரணத்திற்கு ஒரு பெயர் பஜாஜ்.

இந்தியாவில் கால் நூற்றாண்டுக்கும் மேற்பட்ட அனுபவத்தைப் பின்பலமாகக் கொண்ட ஒருசில கம்பெனிகளில் ஒன்று பஜாஜ். இந்த அனுபவ முத்திரை ஒவ்வொரு பஜாஜ் படைப்பிலும் பதிந்துள்ளது. அதோடு, நாட்டிலேயே மிகப்பரவலான பலரக அப்ளையன்ஸ்களை வழங்கும் எங்களுடைய எல்லாப் படைப்புகளிலும் இதனைக் காணலாம். அதுமட்டுமா? 3500க்கும் மேற்பட்ட விற்பனை மற்றும் சர்வீஸ் நிலையங்கள் கொண்ட ஒரு மாபெரும் விற்பனையாளர் அணியைப் பின்பலமாகக் கொண்டது.

அப்ளையன்ஸைப் பொறுத்தமட்டில், தரம், நீடித்த உழைப்பு மற்றும் பாதுகாப்பிற்கு எந்தவிதமான நற்சான்றிதழ்களும் கிடையாது...பஜாஜ் என்னும் பெயரைத்தவிர.




**சிறந்ததையே வாங்குவீர்- பஜாஜ் வாங்குவீர்.**

பஜாஜ் மிக்ஸர்கள், பஜாஜ் ப்ரஷர் குக்கர்கள், பஜாஜ் இஸ்திரிப் பெட்டிகள், பஜாஜ் ஹீட்டர்கள், பஜாஜ் மின் விசிறிகள், பஜாஜ் அவன்கள், பஜாஜ் கால் லைட், பஜாஜ் வாட்டர் பில்டர்கள்

‘அப்படியெல்லாம் கூட அலைகவாங்களா.. என்னை அலஸ்ஸைதயிது. ‘ஃபிங்கர் பிரிண்ட்ஸ்’னு என்னென்னவோ சொல்றானே... அப்படியெல்லாம் துருவிப்பார்த்தா —என்னோட கை, கால் ரேகையெல்லாமும் பதிஞ்சிருக்காதோ...’

நினைக்கையிலேயே நெஞ்சுக்குள் புதுசாய் ஒரு கவலை...

முதல் நாள் மாலையில் ராஜா சொன்னது நினைவுக்கு வருகிறது...

‘‘இதோ பாருங்க மேடம்... வாசல் பக்கமாகப் போகாதீங்க... ஹால் பக்கத்துல இருக்கற மாடிப்படி வழியாப் பின் தெருவுக்குப் போயிடுங்க...’’

‘‘நீங்க...’’

‘‘எனக்கு இன்னும் கொஞ்சம் வேலையிருக்கு. அதைக் கவனிச்சிட்டு வரேன். நிக்காதீங்க.. ஓடுங்க... க்விக்...’’

அதற்கு மேல் அங்கே நிற்கவில்லை தாரா. அந்த அலுவலகத்தின் ஹாலுக்கு இடதுபுறமாய் இருந்த மாடிப்படி வழியே தடதடவெனக் கீழே இறங்கினாள்.

இட நெருக்கடியான அந்தப் பகுதியில், எல்லாக் கட்டிடங்களுக்குமே இரண்டுமாடிப் படிகள் உண்டு.

ஒன்று இவர்களது அலுவலகத்தின் உபயோகத்துக்கும் மற்றொன்று அதே மாடியின் பின்பக்கத்து அலுவலகத்தை நோக்கியும்...

ஹாலைத் தாண்டி வராந்தாவின் ஒரு முனைக்கு ஓடினால், அந்தப் பக்கத்து மாடி வழியே அடுத்த தெருவை அடையலாம்...

தாராவும், ராஜா சொன்னபடியேதான் ஓடினாள். ஜன நெரிசலில், இழுத்துப்போர்த்திய தலைப்புடன், பின்னங்கால் பிடரியில்பட ஓடியவளை, நின்று கவனிக்க யாருக்கும் நேரமில்லை...

அந்த ஓட்டமும், மூச்சிரைப்பும் இன்னமும் தெளியவில்லையே...

தன்னை விரட்டியவன், இப்பொழுது எங்கே என்ன செய்துக் கொண்டிருக்கிறான்...

மடத்தனமாய் ஓடி ஒளிந்திருக்கிறானே... பிடிபடாமலா போய் விடுவான்...

ஐயோ — பிடிபட்டால், அவனுடன் அவளும் அல்லவா...

வீட்டுக்கு வந்தவள், கைப்பையை விசிறியெறிந்து விட்டு, தரையில் அப்படியே கவிழ்ந்து படுக்கிறாள்.

பாபு வீட்டில் இல்லை. இருந்திருந்தால், அவனுக்கு வேறு பதில் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். நல்லவேளை, இல்லை....

பாபு வெளியில் சுற்றப் போனால் —இரவுதான் வீடு திரும்புவான். வீட்டில் இருக்க நேர்ந்தாலோ — நாள் முழுக்கப் படுத்துக் கிடப்பான்.

இன்றைக்கு அவன் வீடு திரும்பவே இரவாகும் என்பதை நினைக்கையில்....

ஏதோ கொஞ்சம் ஆறுதலாக இருக்கத்.. கிறது...

குப்புறக் கிடந்தவள் — எத்தனை நேரம் அப்படியே கிடந்தாளோ... நிச்சயமாய்த் தூக்கமில்லை. முதல் நாள் இரவு முழுக்கத் தூங்காத காரணத்தினால், விழிகள் எரிச்சலெடுக்கிறது...



ஒருமுறை லண்டன் ஈவினிங் ஸ்டாண்டர்ட் என்ற பத்திரிகையின் புதிய அச்சு இயந்திரத்தைத் துவக்கி வைக்க அரசியார் அழைக்கப்பட்டிருந்தார். இயந்திரத்தை அவர் இயக்குவதற்கு முன், யூனியன் உறுப்பினர்கள் மட்டுமே அச்சு இயந்திரங்களை இயக்கலாம் என்ற கட்டுப்பாடு நிலவி வருவது அவருக்குத் தெரிய வந்தது. உடனடியாக அச்சுத் தொழிலாளர் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்ந்து, பின்னரே இயந்திரத்தை இயக்கி வைத்தார் இரண்டாம் எலிசபெத்!

கோ. வீ. ராஜேந்திரன்.

திடீரென முதுகுப் புறத்தில் ‘சில்’லென்ற உணர்ச்சி பரவ, திடுக்கிட்டு எழுந்து உட்காருகிறாள் அவள்.

‘‘யார்...’’

‘‘நான்தான்...’’

கண்களைக் கசக்கிக் கொண்டு, அண்ணாந்து பார்த்தவள் — தன்னெதிரில் நிற்பவனைக் கண்டதும், திறந்த வாயை மூட மறந்து சிலையாய் உட்கார்ந்துவிட்டாள்...

‘‘ராஜா!’’

‘‘உஸ்...’’

அவன், கெஞ்சுகிற பாவனையில் சுட்டுவிரலை, இதழில் பதித்துக் காட்டுகிறான்.

‘‘சத்தம் போடாதீங்க ப்ளீஸ்!’’

‘‘ஐயோ, உங்களைப் போலீஸ் தேடுது...’’

‘‘தேடட்டும். ஆனா கண்டுபிடிக்க முடியாது... அப்படியே கண்டுபிடிச்சாலும்...’’

அவன், ஏதோ சொல்ல வருகையில், அவள் முகத்தை மூடிக் கொண்டு, குலுங்கிக் குலுங்கி அழுகிறாள்.

‘‘உங்களைப் போலீஸ் பிடிச்சா... என் மானமும் சேர்ந்து போயிடும்... எங்கவீட்டுக்காரர் என்னைக் கழுத்தைப் பிடிச்சு வெளியிலத் தள்ளுவாரு... பெத்தவங்க எப்பவோ என்னைத் தலை முழுகிட்டாங்க... நான் எங்கே போவேன்...’’

வார்த்தைகள், புலம்பலாய் வெளிவர—ராஜா — அவளையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்...

(தொடரும்)



# பொழுது போகாதவன்

து. ராமமூர்த்தி

"எப்பவும் ஜன்னல் எதுர்லதான் உக்காந்திருக்காரு!"

"ஆமாம். அவங்க வீட்டுக்குக் குடி வந்தப்பவே கவனிச்சேன். அவரப் புடிச்சுத் தான் ஆட்டோலேர்ந்து எறக்கி, உள்ள அழைச்சிட்டுப் போனாங்க. ரெண்டு வருஷத்துக்கு முன்னால் 'ஸ்ட்ரோக்' வந்ததாம். ஒரு காலும், கையும் ஸ்வாதீனமில்லாமல் போயிடிச்சி. கையில் கம்பு வச்சுக்கிட்டு. வீட்டுக்குள்ளேயே நிதானமா நடக்குறாராம். பாவம். தூங்கற நேரம் தவிர மத்த நேரங்கள்ளே அந்த ரூம் ஜன்னல் எதிர்ல நாக்காலில உக்காந்திருக்காரு."

"கஷ்டம் தான். கைகால் இல்லேன்னு!"

கடைக்குக் கஸ்டமர்கள் வரவும், இவர்கள் பேச்சு தடைப்பட்டது. இவன் ஸ்டூலில் அமர்ந்தபடி தெருவைக் கவனித்தான்.

பணக்கார வீட்டுப் பையன். ஒரே பிள்ளை. படிப்பு ஏறாமல் போக, பாலிடெக்னிக்கில் சேர்த்தார்கள். ஏதாவது தொழில் பயிற்சி பெறட்டும் என்று. எதிலும் அவனுக்குப் பிடிப்பு இல்லை. பாதியில் விட்டுத்தொலைத்தான்.

காலையில் பூப்போன்ற இட்லி அல்லது தோசை, காப்பி. அதன்பின், அப்பாவின் நண்பர் ஸ்ரீராமுலு நாயுடுவின் கடைக்கு வந்து, ஸ்டூலில் உட்காருவான். பழனியப்பன், கடையில் சேல்ஸ்மன். இவன் வயசு தான் இருக்கும். ஒரே சேல்ஸ்மன் ஆனதால் இடுப்பொடிய வேலை.

பகல் சாப்பாட்டுக்காகப் பன்னிரெண்டரை மணிக்குக் கடையை மூடுவார் நாயுடு. இவனும் சாப்பாட்டுக்கு வீட்டுக்குப் போவான். நாயுடு, மூன்றரை மணிக்குக் கடை திறந்து விடுவார். இவன் சாப்பிட்டு, ஒரு தூக்கம் போடுவான். எந்தத் தியேட்டரிலும் புது சினிமா ரிலீஸ் ஆகவில்லை என்றால், மறுபடி ஷாப்புக்கு சுமார் நாலு மணி வாக்கில் வந்து உட்காருவான். நாயுடுவோடு பேசிக் கொண்டிருப்பான்.

"எப்படி உனக்குப் பொழுது போகுது இந்த வயசுல இப்படி ஒண்ணும் செய்யாம உக்காந்திருந்தா?" என்று நாயுடு கேட்பார்.

"எங்க எக்ஸ்டன்ஷன்லெ நாள் பூரா 'ஓ'ன்னு சைலண்டா இருக்கு. தெருவுல ஈ, காக்கா கிடையாது. ஞாயிற்றுக்கிழமை கடை திறக்கறதில்லையா? அன்னிக்கி எனக்கே பொழுது போறதில்லே!" என்று தலையாட்டலுடன் சிரிப்பார்.

"வீட்டுல பொழுது போறதில்லேன்னு தானே இங்க வந்து உட்கார்றேன்."

"ஒனக்கென்ன நாயுடு. பணக்கார வீட்டு புள்ளெ! உக்காந்தே சாப்பிடுவே!"

அன்று காலை மணி ஒன்பது.

ஷாப்பில் நாயுடு, பழனியப்பன், மற்றும் வழக்கம் போல இவன்.

எதிர் வீட்டு ஜன்னலை நோக்கினான். பாரிச வாய்வுக்காரர், தம் இடத்தில் உட்கார்ந்திருந்தார்.

காலை நேரத்தில் பதினொரு மணி வரை தான் நல்ல வியாபாரம். அப்புறம் டல்லடிக்கும். மாலையில், நான்கு மணிக்குப் பின் மறுபடி சூடுபிடிக்கும்.



அவன் தெருவை நோட்டம் விட்டான். தினம் இந்த நேரம் வரும் ஐஸ்கிரீம் குள்ளன் தன் வண்டியோடு வருவதைப் பார்த்தான். கூப்பிடு தூரத்தில் தெருமுக்கு. அங்கே ஒரு மிஷன் பள்ளிக்கூடம். பள்ளிக்கு சிறுவர், சிறுமியர் வரும் நேரத்தில் தான் குள்ளன் தினம் வருவான். நாலடி உயரம். ஆனால் வயசு நாற்பது. அவனைப் பார்ப்பதே பள்ளிச் சிறுவர்களுக்கு வேடிக்கை.

பள்ளிக்கு வெளியிலே ஓர் அரசமரம் உண்டு. அதனடியில், சிமெண்ட்போட்டமேடை மேல் ஒரு பிள்ளையார் அமர்ந்திருக்கிறார்.



பாவம், தலைக்கு மேல் கூரை இல்லை. அரச மர நிழல்தான். மற்றபடி, வெயிலில் காய்கிறார். மழையில் நனைகிறார். குளிரில் வாடுகிறார். அவரும் தெருவை நோக்கியபடி அமர்ந்திருப்பதால், தெருக்காட்சிகளில் அவருக்கும் பொழுது போகிறதோ என்னவோ!

ஐஸ்கிரீம் காரன் வண்டியை நிறுத்துகிறான். வண்டியின் குளிர் சாதனப்பெட்டியின் மூடியைத் திறந்து, டப்.... டப்.... என்று பலத்த சத்தத்துடன் மூடுகிறான். இந்தச் சத்தம் தான் அடையாளம் பள்ளிக் குழந்தைகள் ஓடிவர. ஐஸ்கிரீம் ஐஸ்ஃப்ரூட் வாங்கிச் சப்பிக் கொண்டே அவர்கள் கும்மாளம் அடித்துக் கொண்டு ஓடுகிறார்கள். ஒரு பையன் ஐஸ் ஃப்ரூட் தரைமண்ணில் விழுகிறது. அதை எடுக்க அவன் குனிய, அவன் நண்பன் "வாண்டாண்டா! பூமா தேவிக்குடா!" என்று கூற, அரைமனசாய் இன்னொரு ஐஸ் ஃப்ரூட் வாங்குகிறான். தெருப் பையன்கள், மண்ணில் விழுந்ததன் மேல் பாய்கிறார்கள். சண்டை! கடைசியில், மண்ணைத் தட்டி விட்டுப் பங்குபோட்டுக் கொள்கிறார்கள். எல்லோருக்கும் குஷிதான்.

இவனும் இந்தக் காட்சியைக் குஷியோடு ரசிக்கிறான். அரைமணி போனதே தெரியாமல் போகிறது. கொட்டாவி விடுகிறான்.

எதிர் வீட்டு ஜன்னலைப் பார்த்தான். பெரியவரைக் காணோம். ஒருவேளை அவர் குளிக்கச் சென்றிருக்கலாம். அவ்வாறுதான் அவனுக்குத் தோன்றியது.

தெருவில் நடமாட்டம் குறைந்து, வியாபாரமும் கடையில் டல்லடிக்கத் தொடங்கினால், அவனுக்கும் போரடிக்கும். கொட்டாவியும் குறுகுறுப்பும்தான். ஸ்டூலில் உட்கார்ந்திருக்கும் பழனியப்பனும் ஒவ்வொரு சமயம் சாமியாடுவது உண்டு. நாயுடு மட்டும் சுறுசுறுப்பாக இருப்பார். ஹிந்து பத்திரிகையைப் பிரித்து வைத்துக் கொண்டு, முதலிலிருந்து கடைசி வரை படிப்பார்.

அவன் பார்வை எதிர் வீட்டு ஜன்னலுக்குப் போனால், நாற்காலியில் பெரியவரைப் பார்க்க முடியும். அவரைக் காணாது போனால், பாத்ரூம் போயிருக்கிறாரோ என்னவோ, இல்லை படுத்துத் தூங்குகிறாரோ என்னவோ என்று அவனே தனக்குள் கூறிக் கொள்வான்.

''பாவம், புள்ளைங்க அவனைக் கேலி பண்ணுதுங்க!'' என்றான் அவன் திடீரென்று.

''யாரை?'' என்றார் நாயுடு.

''அந்த ஐஸ்கிரீம் காரனை''

''அவன் கோபிச்சுக்கறதே இல்லை. எப்பவும் சிரிச்சுக்கிட்டே தான் இருக்கான்.'' என்றான் பழனியப்பன்.

''கோவிச்சுக்கிட்டா எப்படி? வயித்துப் பொழைப்பு இருக்கே?'' என்றார் முதலாளி.

பத்தடிக்கப் பத்து நிமிஷத்திற்கு. டீச்சரம்மாக்கள் இருவர், ஒழுங்கான ஆடை அலங்காரத்துடன் பேசிக் கொண்டே பள்ளிக் கூடத்தை நோக்கி நடந்து செல்வது தினசரிக் காட்சி. இருவர் கையிலும் ஹாண்ட் பேகும், லஞ்ச் பாக்கும், இரண்டொரு வாரப்பத்திரிகைகளும் இருக்கும். ஒருத்தி அதிக உயரம்; இன்னொருத்தி குட்டை, அத்துடன் குண்டு.

இவன் தன் உயரத்தை அதிகரிக்கச் செய்ய ஹை ஹீல்ஸ் செருப்பு அணிகிறான். பாவம், நெட்டைக்கு ஒரு வழியும் இல்லே. உயரத்தைக் குறைத்துக் காட்டவோ என்னவோ அவன் முதுகை வளைத்துப் பழக்கம் பண்ணி விட்டான். கூன் விழுந்த மாதிரித் தெரிகிறது. மூக்குக் கண்ணாடி வேறு. சதைப் பற்றில்லாத முகத்துக்கு, வற்றி உலர்ந்த தோற்றம் அளிக்கிறது. நாயுடு இவர்களுக்கு லாரல் அண்ட் ஹார்டி என்று பெயர் சூட்டி இருந்தாலும், பெண்கள் சம்பந்தப்பட்ட விஷயம் எதுவும் இளவட்டங்களுடன் பேச மாட்டார். பெண்கள் யாராவது கடைக்கு வந்து, ஸானிடரி நாப்கின்ஸ் பெயரைச் சொல்லிக் கேட்டால், பலமாகத் தலையை அசைத்து விடுவார். அவற்றை வாங்கி ஸ்டாக் பண்ணுவதே இல்லே!

இன்று டீச்சரம்மாக்கள் கடையைக் கடந்து சென்றுவிட்டு, மறுபடி திரும்பிவந்தார்கள். நெட்டை, வாசற்படியில் நின்றாள். குட்டை, கடைக்குள் வந்து, இரண்டு ஸாரிடான் மாத்திரைகள் வாங்கினாள்.

தலைமை ஆசிரியர், ஒவ்வொரு மாணவனும் கட்டாயம் கிரிக்கெட் ஆட வேண்டும், அதற்காக மாதா மாதம் நான்கணா கட்டணம் செலுத்த வேண்டும் என்று உத்திரவிட்டார். தலைமை ஆசிரியர் ஒரு வெள்ளையர். இது அநீதி என்றும் இவ்வுத்திரவை எப்படியும் எதிர்ப்பது என்றும் ஒரு மாணவன் தீர்மானித்தான். இதை அறிந்த தலைமை ஆசிரியர் வகுப்புக்கு வந்து, "நான்கணா தர முடியாத பிச்சைக்காரப் பயல் எங்கே?" என்று கோபத்துடன் கேட்டார். அம்மாணவன் உடனே எழுந்து, "நான் ஏழை. என் வறுமையை பிறர் அறிவதால் எனக்கு அவமானமில்லே" என்றான். அவனது தீரத்தை மெச்சி தலைமை ஆசிரியர் அவனுக்கு உபகாரச் சம்பளம் கிடைக்க உதவினார்.

இம்மாணவன்தான் பிற்காலத்தில் புகழ்பெற்ற வக்கீலாகி, விடுதலைப் போராட்டத் தியாகியாகி, 1891–ஆம் ஆண்டு நாகபுரியில் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபைக்கு தலைமை வகித்த சென்னை "அனந்தாச்சார்லு".

விஜயா சிவகாசிநாதன்.



அவர்கள் இறங்கிச் சென்றபின், பழனியப்பன், "இவங்க மாசத்துக்கு ஒரு தபா சாரிடான் வாங்குவாங்க!" என்றான்.

நாயுடு அவனை விழித்துப் பார்க்க, அவன் மௌனமானான்.

இவன் எதிர்வீட்டு ஜன்னலை நோக்கினான். பெரியவர் நாற்காலியில் அமர்ந்திருப்பது தெரிந்தது.

தெருவில் லொடக்... லொடக்... சப்தத்துடன் ஒரு கட்டை வண்டி வந்தது. ஏகப்பட்ட மூட்டைகள் ஏற்றிய வண்டி, எப்பொழுது வண்டி கட்டினானோ, எத்தனை தூரம் வந்தானோ? வண்டிக்காரன் உடம்பில் வேர்வை வழிந்தது. மாடுகள் வாயிலிருந்து நுரை தள்ளுகிறது. வண்டிக்காரன், வண்டியை அரச மரத்தடியில் நிறுத்தி, மாடுகளை அவிழ்த்துக் கட்டி, வண்டியிலிருந்து ஒரு பெரிய பொட்டலத்தை எடுத்து வைத்துக் கொண்டு நாஸ்தா பண்ண உட்கார்ந்தான். மாடுகளுக்கு வைக்கோலை அள்ளிப் போட்டான்.

தெருத் தெருவாய் மாட்டுச் சாணி பொறுக்குகிற கிழவிக்கு வயசு எண்பதிருக்கலாம். இடுப்பில் சாணிக் கூடையுடன் அலைகிறவள். அரச மரத்தடி வண்டியைப் பார்த்ததும் நிழலில் நிற்கிறாள் பழியாக. மாடுகளில் ஒன்று சாணி போடத் தொடங்கவும், கூடையை நீட்டி அதிலேயே சாணத்தை ஏந்திக் கொள்கிறாள்.

இவன் பழனியப்பனைப் பார்க்க, அவன் இவனைப் பார்க்க, இருவரும் சிரிக்கின்றனர்.

"அந்தக் கிழவியே அத்தனை சாணியையும் குடிசையைச் சுத்தித் தரையிலே விரட்டி தட்டுது! மருமக ஒண்ணு இருந்தது. நாலு மாசத்துக்கு மின்னே காசநோயிலே செத்துட்டுது. இப்ப வீட்டு வேலை எல்லாமும் இதுவே செய்யிது!" என்றான் பழனி.

ஒரு மூன்று சக்கர சைக்கிள் வண்டியில் காஸ் சிலிண்டர்களுடன் தெருவில் வந்தான் ரத்தினம். தெரு, ஜனநடமாட்டமின்றி வெறிச்சோடியிருந்தாலும், பழக்கதோஷமோ என்னவோ அவன் சிலிண்டர் மேல் ஸ்பானரால் தட்டி, டணங்... டணங்... என்று ஒலி எழுப்பிக் கொண்டே வந்தான். ரத்தினம் இவன் பக்கம் திரும்ப, இவன், அவனைப் பார்த்துச் சிரித்தான். இவர்கள் வீட்டுக்கும் காஸ் கொண்டு வரும் டெலிவரி பையன் அவன்தான். அதனால் இவன் அவனை நன்றாக அறிவான். அரச மரத்தடிப் பிள்ளையார் இருந்த தெரு முனை சற்று மேடான இடம். தெரு, எதிர்முனைக்குச் சற்றுச் சரிவாகச் சென்றது. காஸ் சிலிண்டர் பையன் சரிவிலிருந்து மேட்டுக்குச் சென்றதால், சைக்கிளில் எழுந்து நின்றபடி, குனிந்து, குனிந்து பெடலை அமுக்கி, மேலேற வேண்டியிருந்தது. மூச்சு வாங்குவது தெரிந்தது.

"பாவம், இவங்களுக்கு ரொம்பக்கொற வாய்க் குடுக்கறாங்க சம்பளம்!" என்றான் பழனியப்பன்.

"அதுக்கு பதில் தான் ஒவ்வொரு வீட்டிலும் நிறைய டிப்ஸ் கிடைக்குதே! ஒரு சிலிண்டருக்கு ரெண்டோ, மூணோ எக்ஸ்ட்ராவாத் தரோமே."

அப்பொழுது தான் அந்த அதிசயம் நிகழ்ந்தது.

எதிர் வீட்டுப் பெரியவர், இடது கையில் வாக்கிங் ஸ்டிக்குடன், வலது காலை இழுத்து-இழுத்து நடந்தபடி, மெதுவாகப் படி இறங்கி, தெருவைக் கவனமாகக் கடந்து நாயுடுவின் கடைக்கு வந்தார்.

முகமலர்ச்சியுடன் வரவேற்றார் நாயுடு.

''உக்காருங்க!''

இவன் தன் ஸ்டூலை விட்டு எழுந்தான். பெரியவர் வெகு நிதானத்துடன் உட்கார்ந்தார்.

மெலிந்த தேகம்; நரைமுடி, குழிவிழுந்த கண்கள்.

''என்னங்க ஸார் வேணும்?''

''வாய் ஒரே கசப்பாருக்கு. புளிப்பா இந்தக் கிச்சிலிப் பெப்பர்மிண்ட் பாக்கெட் வருதே இருக்கா?''

''இருக்கே.''

பழனியப்பன் எடுத்துக் கொடுத்தான்.

''அமிர்தாஞ்சன்?''

''இருக்கே.''

''ஒரு பாட்டில் குடுங்க. நேத்து எம் மருமக ஆபீஸ்லேந்து வரப்ப, ஒரே தல நோவுன்னு வந்தா. இன்னிக்கும் அப்படி வந்தா?''

''பாவம், பகல் பூரா ஜன்னல் எதிர்லியே உக்காந்திருக்கிங்க!''

பெரியவர் உதடுகளில் புன்சிரிப்பு லேசாக பரவிற்று. பேச்சும் மெதுவாக வந்தது. வார்த்தைகளும் தெளிவாக இல்லை.

''என்ன செய்யறது? நடக்க முடிஞ்சா, காலேல, சாயங்காலத்துலே இப்படி ஒரு ரவுண்டாவது போகலாம். அதுவும் முடியலே. பகல்லே படுத்துத் தூங்கிப் பழக்க மில்லே, சர்வீஸ்லே இருந்தப்ப, காலேல ஆறு மணியிலேந்து சாயங்காலம் ஆறு மணி வரை வேலை செஞ்சு பழக்கமாப்போச்சு. ரொம்பக் கஷ்டமாருக்கு. மருமகளும் வேலைக்குப் போகுதா; காலேல, ஸ்டூல்ல உக்காந்தபடியே காய்கறி ஆஞ்சு தருவேன்; நறுக்கித் தருவேன். அரிசிலே கல்லு, நெல்லு பொறுக்குவேன்......''

''பகல்லெ தூங்கவும் முடியலேன்னு கஷ்டம்தான்!''

''பொழுது போகாம இல்லே; போயிடுதுன்னு வச்சுக்குங்க! ஜன்னல் எதிர்ல உக்காந்தா, நேர்ல ஒங்க கடைதான் தெரியுது. இந்தப் புள்ளையாண்டானும் எப்பவும் இங்கியே உக்காந்திருக்கானா? அவனையும், அவன் பேச்சையும், சிரிப்பையும் பாத்துக்கிட்டே இருக்கேன்! பொழுது போயிடுது! நீங்க கடை மூடறப்ப நானும் பகல் சாப்பாடு சாப்புடுவேன்.''

''உக்கார முடியாதா தரைல?''

''ஸ்டூல்ல உக்காந்தே சாப்புடுவேன். மருமக சாம்பார் சாதம், தயிர் சாதம் ரெண்டு பாக்கலே பிசைஞ்சு வச்சுட்டுப் போகும். பாவம், பொண்ணுங்க வேலைக்குப் போனா, அதுங்களுக்கு ரொம்பக் கஷ்டம். வீட்டு வேலையையும் கவனிக்கணும்; ஆபீஸ்லயும் வேலே! வேலைக்குப் போகாம இருக்கவும் முடியல. காலம் அப்படி இருக்கு. ஒத்தர்



## அருள்வாக்கு

பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்றார் திருவள்ளுவர். எல்லோரும் வீடு வாசலை விட்டு விட்டு ஆத்ம விசாரத்தில் ஈடுபட முடியாது. உலக வாழ்க்கையை நடத்துவதனால் பணம் வேண்டித்தான் இருக்கிறது. இப்படிச் சம்பாதித்துக் குடும்பம் நடத்துபவர்கள் இருப்பதனால் தான் வேறு சிலர் ஆத்ம விசாரம் செய்ய முடிகிறது. பொருள் தேடி வாழ்க்கை நடத்தும் கிருகஸ்தர்கள்தான் ஆத்ம விசாரத்தில் ஈடுபட்ட சந்நியாசிகளுக்கு பிக்ஷை அளித்து அவர்களை ரட்சிக்கிறார்கள். கிருஹஸ்தர்கள் இல்லாவிட்டால் பொருளைப் பற்றி நிர்விசாரமாக சந்நியாசிகள் என்று சிலர்ஞானம், பக்தி இவற்றிலேயே ஈடுபட்டிருக்க முடியாது. ''பொருள் (பணம்) என்பது பொருள் இல்லாதது'' 'அர்த்தம் அனர்த்தம்' என்று சொன்ன அதே ஆதி சங்கராச்சாரியாள் அதே ''பஜகோவிந்த''த்தில் பணப்பேராசை பிடித்து அலையாதே! ஆனால் உனக்கு உரிய கர்மத்தினால் நீ சம்பாதிக்கிற பொருளைக் கொண்டு நியாயமாக வாழ்ந்து உன்னையே உயர்த்திக் கொள்'' என்றார்.

யல்லபஸே நிஜ கர்மோபாத்தம்
வித்தம் தேன விநோதய சித்தம்

-ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

சம்பளத்துலே வீட்டு வாடகை குடுக்கர்தா, துணிமணி வாங்கர்தா......''

அவர் மெதுவாகக் கம்பை ஊன்றித் தெருவைக் கடந்து சென்றார்.

நாயுடு கடையை மூடினார். பழனியப்பன் சாப்பாட்டுக்குப் போனான். பொழுதுபோகாதவனும் வீட்டை நோக்கி நடந்தான். சாப்பிட்டு, ஒரு தூக்கம் போட..

# உலக மகா கவியின் ஜனன பூமி

வாஸந்தி

லண்டனுக்குச் செல்லும் எல்லா இலக்கிய அன்பர்களுக்கும் ஷேக்ஸ்பியர் பிறந்த ஊரான 'ஸ்ட்ராட்ஃபோர்ட் அபான் ஏவன்' ஐப் பார்க்கப் போவது ஒரு ஷேத்திராடனம் போல.

லண்டனிலிருந்து இந்த அழகிய கிராமத்திற்குச் செல்ல நிறைய டூரிஸ்ட் கோச்சுகள் இருக்கின்றன. காலை எட்டு மணிக்குக் கிளம்பி மாலை ஆறு மணிக்குத் திரும்புகிற சுற்றுலா இது.

குளிர் சக்கைப் போடு போட்டது. அன்று இளம்பும் போதே மழை நச நசவென்று பிடித்துக்கொண்டது. பஸ்ஸுக்குள் வெப்பமாகக் குளிர் தெரியாமல் வசதியாக இருந்தது. இந்த கோச்சில் வந்த ஆண் கைடு மிக உற்சாகமாக இருந்தார். ஷேக்ஸ்பியரிடம் ஆத்மார்த்தப் பிரியமும் பக்தியும் கொண்டவராக அழகிய ஹாஸ்யம் கலந்த ஆங்கிலத்தில் பேசிக் கொண்டு வந்தார்.

லண்டனின் எல்லையைத் தாண்டியவுடன் பச்சைப் பசேல் என்ற வாயற்புறம் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. வழி நெடுகவும் மிக உயர் ரகமான தார் பாதை. பஸ் வழுக்கிக் கொண்டு சென்றது. ஜனங்களையே காணோம். நர்ஸரி ரைம் புத்தகங்களில் இருக்கும் சித்திரங்களைப் போலவே அங்கொன்றும் இங்கொன்றுமான அழகிய சுத்தமான வீடுகள். புல்லை மேய்ந்து கொண்டு அபூர்வமாகக் காட்சி அளிக்கும் கஷ்குமுஷ்கு ஆடுகள், மாடுகள். பயணமே கனவைப் போல் பிரமையேற்படுத்திற்று.

கைடு பாட்ரிக் ஷேக்ஸ்பியரைப் பற்றிச் சொல்லிக் கொண்டே வந்தார். 'ஷேக்ஸ்பியர் பின்னால் உலகப் புகழ் பெறப்போகிறார் என்று தெரிந்திருந்தால் அவரது ஆரம்ப வாழ்க்கைச் சித்திரத்தை ஆங்கிலச் சரித்திர ஆசிரியர்கள் இன்னும் விரிவாக கவனமாக எழுதி விருப்பார்கள். அவரது இளமை வாழ்க்கையைப் பற்றி நமக்குத் திட்டவட்டமாக ஏதும் தெரியவில்லை. ஷேக்ஸ்பியர் பிறந்தபோது சுமாரான வசதியுள்ள குடும்பமாக இருந்திருக்க வேண்டும். அங்கிருந்த இலக்கணப் பள்ளியில் அவரது பள்ளிப்பருவம் முடிந்தது. தந்தையின் வியாபாரத்தில் ஏற்பட்ட நஷ்டத்தினால் பொருளாதார நிலையைச் சரிக்கட்ட சற்று வசதியுள்ள இடத்தைச் சேர்ந்த, ஆன் ஹாத்தவே என்ற பெண்ணிற்கும் அவரைவிட ஆறு வயது இளையவரான ஷேக்ஸ்பியருக்கும் திருமணம் நடந்தது போல் தோன்றுகிறது. என்ன காரணத்தாலோ ஷேக்ஸ்பியர் மனைவியுடன் அதிகம் தங்காமல் லண்டனுக்குச் சென்று நாடகக் கம்பெனியில் சேர்ந்தார். பணத்துக்காகவே நாடகங்கள் எழுத

○ லண்டன் நகரம் - விமானத்திலிருந்து ஒரு காட்சி





ஷேக்ஸ்பியர் பிறந்த வீடு

ஆரம்பித்தார். அவருடைய புகழ் பெற்ற நாடகங்கள் எல்லாமே அநேகமாய் மிக அவசரத்தில் நிர்ப்பந்தத்தினால் எழுதப்பட்டவை...''

எனக்கு பிரமிப்பு அடங்கவே இல்லை. இதெல்லாம் உண்மையாக இருக்க வேண்டுமானால் மிக அசாதாரணமானவர் இந்த ஷேக்ஸ்பியர் என்று தோன்றிற்று. போகிற போக்கில் எழுதப்பட்ட நாடகங்கள் எல்லாம் உலகம் போற்றும் அமர காவியங்களாகப் பரிணமிக்க வேண்டுமென்றால் எப்படிப்பட்ட அருளாக இருக்க வேண்டும் அது!

ஷேக்ஸ்பியர் பிறந்த வீடு பல கைகள் மாறிவிட்டதால் அவர் இருந்த போது இருந்த மாதிரி இப்பொழுது இல்லை என்றார் பாட்ரிக். வழியில் ஆன் ஹாத்தவேக்கு சொந்தமான வீடு இருக்கிறது. அவரது குடும்ப வழியில் வந்த சந்ததியருக்கே அந்த வீடு இன்னமும் சொந்தமாக இருப்பதால் 15-16ம் நூற்றாண்டில் வீடு எப்படியிருந்ததோ அப்படியே வைத்திருப்பதாகச் சொன்னார்.

மிக அழகிய தோட்டத்துடன் மரத்தினால் ஆன வீடு. சுத்தமாக வைக்கப்பட்டிருக்கிறது.

பாத்திரங்கள் கூட பாலிஷ் செய்யப்பட்டு அலமாரிகளில் கவனமாக வைக்கப்பட்டிருக்கின்றன. அங்கங்கே மலர்த் தொட்டிகளில் மலர் அலங்காரங்கள். ஒரு ஆலயத்தின் பரிசுத்தத்துடன், புனிதத்துடன் பாதுகாத்து வருகிறார்கள், ஷேக்ஸ்பியர் இங்கும் சில காலம் இருந்தார் என்கிற பக்தியில்!

ஸ்ட்ராட்பஃர்ட் அபான் ஏவன் (ஏவன் என்னும் நதியின் மேல் இருக்கும் ஸ்ட்ராட்ஃபர்டு எனும்கிராமம்) கிராமமே 'மாடல்' கிராமம்போல் அழகாக, சுத்தமான வீடுகளும் தெருக்களுமாக இருக்கிறது. ஷேக்ஸ்பியரின் வீடு ஒரு பிரதான சாலையை நோக்கினாற்போல் இருக்கிறது.

'இந்த அறையில் தான் ஷேக்ஸ்பியர் பிறந்தார்' என்ற வார்த்தைகள் அந்தத் தரையில் கால்கள் பதிய நின்றிருந்த எனக்கும் என்னுடன் கூடப் பயணித்த ஒரு இளம் அமெரிக்கப் பெண்ணுக்கும் நிச்சயம் ஒரு கிளுகிளுப்பை ஏற்படுத்தியது. ஷேக்ஸ்பியரின் கையெழுத்தும் அவருடைய தந்தையின் கையெழுத்தும் கொண்ட சில காகிதங்களைக் கண்ணாடிப் பெட்டிகளில் வைத்திருக்கிறார்கள். அந்த வீட்டின் மூலை முடுக்கிலும் கூட ஆங்கிலமக்கள் இந்தக் கவிச் சக்கரவர்த்திக்குக் காட்டும் மரியாதை தெரிகிறது. இங்கேயே ஒரு பகுதியில் ஷேக்ஸ்பியரின் புத்தகங்களும் போஸ்டர்களும் கார்டுகளும் கிடைக்கின்றன. இந்தக் கிராமத்தில் ஷேக்ஸ்பியரின் ஞாபகார்த்த அரங்கம் ஒன்று கட்டியிருக்கிறார்கள். அவரது சோக நாடகங்களின் கதாநாயகர்கள் மாக்பெத், ஹாம்லெட், லியர், ஒதெல்லோவின் சிலைகள் கம்பீரமாக முகப்பில் நிற்கின்றன. ஒவ்வொரு வேனிற்காலமும் பெரிய நாடக விழா நடக்கிறது இங்கு.

காளிதாஸனுக்கும், கம்பனுக்கும் நாம் இந்த அளவுக்கு மரியாதைகொடுத்துப் போற்றுகிறோமா என்று என்னுள் ஆதங்கம் ஏற்பட்டது. சமீப காலத்தைச் சேர்ந்த சங்கீத மும்மூர்த்திகளுக்கும் பாரதிக்கும் கூடக் கொடுக்க வேண்டிய முக்கியத்துவம்கொடுக்காத அசிரத்தைக்காரர்களாக, அவர்களது ஞாபகச் சின்னங்களைப் போற்றத் தெரியாத பாமரர்களாய் இருக்கும் அவலம் துக்கப்படுத்திற்று. கம்பனைப்பற்றி வடக்கத்தியருக்கும், காளிதாஸனைப் பற்றி தென்னிந்தியருக்கும், தீட்சதர், தியாகய்யரைப் பற்றி மேற்கு–கிழக்கிந்தியருக்கும் தெரியாமல் இருக்கும் அறிவீன நிலையில் நமது கலாச்சாரப் பெருமைகளை வெளியுலகம் தெரிந்து கொள்ளுவது எந்தக் காலத்தில்? லண்டனுக்குத் திரும்பும் வழியில் மழையையும் லட்சியம் செய்யாமல், கைடின் உற்சாகப் பேச்சில் மயங்கிப் புராதன வாரிக் அரண்மனையைச் சுற்றினோம்.

பக்கிங்ஹாம் அரண்மனை



அன்றும் முந்தைய தினம் லண்டன் பயணத்திலும் பஸ்ஸிலிருந்த பயணிகள் எல்லோரும் அமெரிக்கர்கள், நடு வயதுக்காரர்கள். இங்கிலாந்து சரித்திரம் இலக்கியம், அரசியல் ஆகியவைகளைப் பற்றியுமே அவர்களுக்குப் பொது அறிவில்லாமல் இருந்தது எனக்கு மிக ஆச்சரியமாக இருந்தது. அவர்களது மூதாதையர்கள் ஆங்கிலேயர்கள் என்ற காரணத்தால் இயல்பான ஒரு ஆர்வம் இருக்காதா என்று வியந்தேன். ஆங்கில இலக்கியத்தைப் பாடமாகக் கொண்ட ஒரு இளம் அமெரிக்கப் பெண் ஒருத்திதான் இந்தச்சுற்றுலாவில் எனக்கு ஜோடியாக உற்சாகம் காண்பித்தாள். இந்த உற்சாகமே எங்களிருவரையும் ஆகர்ஷித்தது. ''தற்கால அமெரிக்க எழுத்தாளர்கள் யாரை உங்களுக்குப் பிடிக்கும்?'' என்றாள். 'மாலமூத்தும் ஜான் அப்டைக்கும் பிடிக்கும்'' என்றேன்.

''நாம் நண்பர்கள்!'' என்று சந்தோஷத்துடன் கையைக் குலுக்கினாள். ''நீங்கள் இருவரும் எந்தப் பல்கலைக் கழகத்தில் வேலை பார்க்கிறீர்கள்?'' என்று மற்றவர்கள் கேட்கும் அளவுக்கு நாங்கள் சர்ச்சையில் ஆழ்ந்தோம்.

அந்தப் பெண்—பாமெலா—அழகாக இருந்தாள். நியூயார்க்கில் ஒரு கம்பெனியில் வேலை பார்ப்பதாகச் சொன்னாள்.

''கல்யாணம் செய்து கொள்ளவில்லையா?'' என்றேன்.

''என்னுடைய மேலதிகாரி என்னை மணந்து கொள்ள விரும்புகிறார். யோசிக்க அவகாசம் வேண்டும் என்று சுற்றுலா கிளம்பி வந்தேன்!''

''ஏதாவது பிரச்சினையா?''

''ஆமாம். அவர் இருமணமானவர். இரண்டு குழந்தைகள் இருக்கிறார்கள். விவாகரத்து இப்பொழுதுதான் ஆயிற்று. நானும் அவரும் அலுவலக ரீதியில் நிறையப் பழகியிருக்கிறோம். ஆனால் அவருக்கு இந்த எண்ணம் இருக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. திடீரென்று என்னிடம் கேட்டதும் எனக்குக்குழப்பமாகி விட்டது. அவர் நிலையான துணைவராக இருப்பாரா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்...''

அரைமணி நேரப் பழக்கத்தில் அவள் என்னிடம் மனம் திறந்து பேசியது ஆச்சரியமாக இருக்கிறது. இது அமெரிக்க குணமாக இருக்க வேண்டும். அல்லது தன் சந்தேகத்துக்கு விளக்கம் தேடும் யத்தனமாக இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன்.

அவரவரது வாழ்க்கைப் பிரச்சினையை அவரே தீர்மானிக்கப் பழகியிருக்கும் மேற்கத்திய இளைய சமுதாயத்தின் பிரதிநிதியான இந்தப் பெண்ணின் கெட்டிக்காரத்தனமும் சுட்டிகையும் என்னைப் பெரிதும் கவர்ந்தன. பேச்சும் நடையுடை பாவனையும் மிக்க மரியாதையாக இருந்தது. அவளை மணக்க ஆசைப்பட்ட ஆணின் ஸ்திரத்தைப் பற்றிய அவளது சந்தேகம் இன்றைய அமெரிக்கப் பெண் சமுதாயத்தின் பொதுவான சந்தேகத்தின் பிரதிபலிப்பு என்று தோன்றிற்று.

மழையிலும் குளிரிலும் அன்று சுற்றிய சுற்றலில் லண்டன் திரும்புவதற்குள் மிகவும் சோர்ந்துபோனேன். அன்றைக்குப் பார்க்கவிருந்த Mouse trap நாடகத்தைப் பார்க்கத் தெம்பில்லாமல் (நாடகத்துக்குப் போனால் இரவு பதினொரு மணிக்கு ஸப்வே டிரெயினில் பயணித்துப் பிறகு டாக்ஸி பிடித்து ஹாரோவுக்குத் தனியாகப் போக வேண்டும் — நடுக்கும் குளிரில்! என்னுடைய நாடகப்பித்தைக் கூட இந்த நினைப்பு அடக்கிவிட்டது!) ஹாரோவுக்குத் திரும்பினேன்.

லண்டன் ஸப்வேயில் பயணிப்பது மிக மிகச் சுலபம். மலிவு. கொஞ்சம் கூடக் குழப்பம் ஏற்படாத வகையில் விளக்கங்களும் வரைபடங்களும் ரயில் பெட்டிக்குள்ளும் ஸ்டேஷன்களிலும் இருக்கின்றன. லண்டனில் எந்த இடத்திற்கு வேண்டுமானாலும் வெகு விரைவாக இந்த ரயில்களில் செல்லலாம். நிறைய இந்தியர்கள், முக்கியமாகப் பஞ்சாபிகள்



கேரளாவில் நாடோடிகள் மயில்களைக் கொன்று சாலையோரம் வரிசையாக நிறுத்தி வைக்கிறார்கள். மயில்களின் கல்லீரலிலிருந்து எண்ணெய் தயாரிப்பதாகவும், அந்த எண்ணெய் எல்லா வியாதிகளையும் தீர்க்கும் நிவாரணி என்றும் சொல்லி விற்கிறார்கள். மயில்களை ஆந்திராவில் உள்ள காடுகளில்பிடித்து, தமிழ்நாட்டில் கொன்று, கேரளாவிற்கு அந்த உயிரற்ற மயில்களைப் பெட்டியில் ஏற்றி அனுப்புகிறார்களாம். இந்த வாயில்லாப் பறவைகளின் உயிர்ச் சித்திரவதையைத் தடுக்க காட்டிலாகா அதிகாரிகள் முயற்சி எடுப்பார்களா?

ஆதாரம்: ''சன்'' பத்திரிகை
தகவல்: பத்மினி கிருஷ்ணன்

தென்பட்டார்கள் ரயிலிலும் தெருக்களிலும். யாரும் நம்மைக் கண்டு கொள்வதேயில்லை!

லண்டன் ஸப்வேக்களில் நிறைய விசித்திர கோலத்தில் இளைஞர்களைப் பார்த்தேன். வேடிக்கையான சிகையலங்காரம், கண்ணில் மை, ஒரு காதில் லோலாக்கு. ('எந்தக் காதில்' என்று யாரோ கேட்டார்கள். அதிலும் வித்தியாசம் இருக்கிறதாம்!) இவர்கள் ஹோமோ ஸெக்ஷுவல்ஸ் என்று பார்த்தவுடன் புரிந்தது. இவர்களது கூட்டத்துக்கு சட்டத்தின் அங்கீகாரம் கிடைத்திருந்தாலும் எனக்கு அவர்களைப் பார்த்து ஒரு பரிதாபமா, அனுதாபமா என்று புரியாத உணர்வேற்பட்டது. 'அவர்களிடம் வம்புக்குப் போகக் கூடாது' என்று திரு. பட்டப்பா பயமுறுத்தினார்!

மறுநாள் காலை நியூயார்க்கிற்குக் கிளம்பிய போது லண்டனில் அதிக நாள் தங்க முடியாமல் போனதற்கு மிகவும் வருந்தினேன். நிறைய இடங்கள் இன்னும் பார்ப்பதற்குஇருந்தன. நேரமின்மையால், பார்க்க முடியவில்லை.

லண்டனிலிருந்து நியூயார்க்கிற்கு ஏழு மணி நேரப் பயணம். அந்த நேரத்தை வீணாக்க விரும்பாமல் நான் ப்ளேனில் என் பயணக்கட்டுரையின் ஒரு அத்தியாயத்தை எழுதி முடித்தேன். ஏர் இந்தியாவில் பயணம் செய்ததால் அவர்களையே இந்தியாவுக்கு கட்டுரையை அனுப்பச் சொல்லலாம் என்கிற எண்ணத்துடன் பிரதம ஸ்டூவர்டிடம் சென்று விவரத்தைச் சொன்னேன்.

''எங்களைப் பற்றித்திட்டி எழுதவில்லையே?'' என்றார் ஸ்டூவர்ட்.

''உரிய காலத்தில் சேர்ப்பித்து விட்டீர்களானால், உங்களைப் பாராட்டி எழுதுவேன்'' என்றேன்.

அவர் மிகுந்த அக்கறையுடன் உறையை வாங்கிக் கொண்டு, 'அது உடனடியாக இந்தியாவுக்கு அனுப்ப வேண்டிய ப்ரெஸ் விஷயம்' என்று குறித்துக் கொண்டு ஏர் இந்தியா செலவிலேயே அனுப்பி விடுவதாகத் தெரிவித்தார். உரிய காலத்தில் கட்டுரை போய்ச் சேர்ந்து விட்டதைப் பிறகு அறிந்தேன்.

நான் இந்தவெளிநாட்டுப் பயணத்தில் பல தேசத்து விமானங்களில் பயணம் செய்தேன். ஆனால் ஏர் இந்தியாவில் கிடைக்கும் ராஜோபசாரமும் மரியாதையும் கவனமும் வேறு எந்த விமானத்திலும் இல்லை. சாப்பாடும் ஆவி பறக்கும் சூட்டுடன் முதல் தரம்!

நியூயார்க் கென்னடி விமான நிலையம் சமுத்திரம் போல் இருக்கிறது. விமானத்திலிருந்து இறங்கி வெளியே வருவதற்குள், ஏகக்கெடுபிடி, விசாரணைகள் செக்கிங். கும்பலில் ஊர்வலத்தில் நின்று நகர்வது போல் நகர்ந்து வெளியில் வர ஒரு மணி நேரமாகி விட்டது.

லண்டனுக்கும் நியூயார்க்குக்கும் நிறைய வித்தியாசம் தெரிந்தது. இங்கு பாஷையும், உச்சரிப்பும், (இவர்கள் ஆங்கிலம் பேசுகிறார்கள் என்று யார் சொன்னது?) நம்மை உண்மையிலேயே சில சமயங்களில் விழிக்க வைக்கிறது. நிறைய கருப்பர்கள் தெரிந்தார்கள். அவர்கள் பேசும் ஆங்கிலம் அதிகக் கொச்சை.

என்னுடைய சாமான்கள் வந்து சேர்ந்ததும் நான் டிராலியைத் தேடிக் கொண்டிருக்கையில் ஒரு கருப்பு போர்டர் டகாலென்று என்னுடைய சாமானைத் தூக்கி இருபது அடி தள்ளிக் கொண்டு வைத்து,

''பணத்தைக் கொடு!'' என்றார். (தொடரும்)

---

ஐதராபாத்திலுள்ள அரசு நிறுவனமான 'எச். எம். டி.' ஒரு விநோதமான விளம்பரம் செய்துள்ளது! அதாவது இத்தொழிற்சாலையிலுள்ள 'சிலந்தி' வலைகளை அகற்ற 'டெண்டர்' கோரி விளம்பரம் கொடுத்துள்ளது.

சுமார் 20 ஆயிரம் முதல் 50 ஆயிரம் ரூபாய் வரை கோரி பலர் விண்ணப்பித்திருக்கின்றனர். —சம்பத்குமாரி.






டைரக்டர்: ''கடைசியில் ஹீரோ சாவராரு? ஹீரோயின் சாவராங்களா?''

கதாசிரியர்: ''புரட்யூசர்தான் சாவறார்.''

—ஜை. அ. கதிர்வேல்.

(வீட்டின் முன்னால் உள்ள வராந்தாவில் அமர்ந்து கையில் இருக்கும் பென்சிலையும் பேப்பரையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருக்கிறான் ரகுபதி. உள்ளே இருந்து சுமதி வருகிறாள்.)

சுமதி: காலங்காத்தால அந்த பாழாப்போன பேப்பரையும் பென்சிலையும் எடுத்துட்டு உட்கார்ந்துட்டா விடிஞ்ச போன மாதிரி தான்.

ரகுபதி: எப்படி உட்கார்ந்தாலும் விடியறது அதுபாட்டுக்கு விடியும். சும்மா ஏன் கத்தறே விடிஞ்சதும் விடியாததுமா?

சுமதி: கத்தினத்தானே நான் ஒருத்தி வீட்ல இருக்கிறதே உங்க கண்ணுக்குத் தெரியுது. நானும் கல்யாணம் ஆனதிலே யிருந்து பார்த்துட்டேதான் இருக்கேன். அந்த ஓட்டைப் பென்சிலே ஆகாசத்துலே சுத்திட்டு, அந்த வெத்துப் பேப்பரை வச்ச கண் வாங்காமப் பார்த்துட்டு அப்படி என்னதான் சாதிக்கிறீங்களோ தெரியலே.

ரகுபதி: (புன்னகையுடன்) இது ஓட்டைப் பென்சிலா? இது வெத்துப் பேப்பரா? பைத்தியக்காரி. பார்த்துட்டே இரு. எண்ணி இன்னும் ஆறே மாசம். அப்புறம் எனக்கு வந்து குவியப் போற ரசிகர்களோடப் பாராட்டுக் கடிதங்களைப் பார்த்து நீயே அசந்து போயிடப்போறே. அந்தக் கடிதங்களையெல்லாம் கவனிக்கறதுக்குன்னே தனியா ஒரு செக்ரட்டரிய வச்சுக்கப் போறேன்!

சுமதி: அப்படியே வக்கீல் நோட்டீசுகளைக் கவனிச்சுக்கறதுக்கும் ஒரு அரை டஜன் செக்ரட்டரிகளைத் தனியா வச்சுக்குங்க. கொஞ்ச நேரத்தில வீட்டுக்காரன், பால்காரன், மளிகைக் கடைக்காரன் எல்லாம் வருவாங்க. அவங்களோடு உங்க ஓடிப் போன மூடும் வருதான்னு தேடிப் பாருங்க.

('டங்'கென்று காப்பிடம்ளரை வைத்து விட்டுப் போகிறாள்.)

ரகுபதி: ஹூம்... எழுத்தாளனுக்குக் காப்பி கொடுப்பதற்குள் இத்தனை ஆர்ப்பாட்டமா? வரமூடும் ஓடிடும்.

(போன வேகத்திலேயே திரும்பி வருகிறாள் சுமதி.)

சுமதி: பக்கத்துத் தெரு மரகதம்மாளோட வீட்டில பொண்ணும் மாப்பிள்ளையும் இன்னைக்கு ஊருக்குப் புறப்பட்டுப் போறாங்களாம். கண்டிப்பா வந்துட்டுப் போகச் சொல்லி மாமி சொல்லிட்டுப் போனாங்க. உப்புமா ரெடி பண்ணி வச்சிருக்கேன். போட்டு சாப்பிட்டுக்குங்க.

ரகுபதி: (புன்னகையுடன்) போன வாரம் தாலி முடிச்சு, இந்த வாரம் மூட்டை முடிச்சா?

சுமதி: கொஞ்சம் சும்மா இருக்கீங்களா? புறப்படற சமயத்திலே எதையாவது உளறி என்னோட மூடைக் கெடுத்திடாதீங்க.

(போகிறாள்.)

ரகுபதி: ஹூம். கலாரசனையே இல்லாத ஜன்மம்.

(வெளியே – யாரோ 'சார்... சார்' என்று அழைக்கிறார்கள்.)

ரகுபதி: யாரய்யா அது. காப்பி குடிக்கிற சமயத்திலே கஷாயத்தைக் கலக்கற மாதிரி... எஸ்... கம் இன்.

(மளிகைக் கடைக்காரர் வருகிறார்.)

மளிகை: (வந்து கொண்டே) இதுக்கு ஒண்ணும் குறைச்சல் இல்லே. உள்ளே வந்ததும் பஞ்சப் பாட்டுப் பாடு.

ரகுபதி: என்ன மளிகைக் கடைக்காரரே, வரவர மரியாதை குறைஞ்சிட்டே வருது.



# ரகுபதியின் அரங்கேற்றம்

ஜீ [illegible]




மனிகை: பாக்கி அதிகமாயிட்டே போனு, அது குறைஞ்சிக்கிட்டே தான் வரும். (மெதுவாக) இது கூடத் தெரியாமே சினிமாவுக்குக் கதை எழுதறேன்னு வந்துடறுங்க. பாக்கிக்காக நடந்து நடந்தே என்னேட காலில் கால் பாகம் தேஞ்சுப் போச்சு.

ரகுபதி: (புன்னகையுடன்) காலில் கால் பாகம் தேஞ்சுப் போச்சா. அப்படீன்னு இப்ப நீங்க முக்கால்லே நடந்துட்டிருக்கீங்கன்னு சொல்லுங்க.

மனிகை: உம்மோடு பெரிய ரோதனையாப் போச்சய்யா. இந்த மாதிரி கேனத்தனமான ஜோக்குகளையெல்லாம் சொருகி நீர் கதை எழுதி, அதை எவனுவது படமா எடுத்தா அதுக்கப்புறம் அவன் அடுத்த படம் எடுக்க மாட்டான். அன்னைக்காவடிதான் எடுப்பான்.

ரகுபதி: (தனக்குள்) பெரிய திரிகால முனி. ரசனை கெட்ட சனியன் (மளிகைக்கடைக்காரரிடம்) சரி... சரி... அதை விடுங்க. உங்களோட பாக்கியை இன்னும்...

மனிகை: (இடைமறித்து) 'பத்து நாளிலே தீர்த்துடறேன்'னு அஞ்சு மாசத்துக் முன்னுடியிருந்து சொல்லிட்டு வர்ர மாதிரி சொல்லப் போறீங்க. இனியும் நான் ஏமாறத் தயாராயில்லே. இன்னைக்கு ரெண்டுல ஒன்னு தெரிஞ்சாகணும். அதுவரைக்கும் இந்த இடத்தை விட்டு நான் நகரப் போவதில்லே.

(பால்காரர் வருகிறர்)

பால்காரர்: அப்படி, சபதம், விபதம் போட்டுங்கன்னு அப்புறம் நீங்க இந்த இடத்திலேயே சமாதியாக வேண்டியதுதான். இந்த மனுஷன் எதையாச்சும் சொல்லிச் சமாளிச்சுடுவார். கவுண்டமணி சான்ஸ் தர்ரேன்னு சொல்லி மூணுமாசமா என்னைச் சமாளிச்சுட்டு வர்றவராச்சே.

மனிகை: (ஆச்சரியத்துடன்) கவுண்டமணி சான்சா?

பால்: ஆமாங்க. நான் அசப்புல கவுண்டமணி மாதிரியே இருக்கேனும்— பேசறேனும். அதனுலே இவர் கதையைப்

படமா எடுக்கிற டைரக்டர் கிட்டே சொல்லி எப்படியாவது கவுண்டமணி டைப் ரோல் ஒண்ணு வாங்கித் தர்றதாச் சொல்லி ஏமாத்திக்கிட்டிருக்காரு.

மளிகை: அட்ரா பொக்கை. கஞ்சிக்கே கஷ்வாத்து. தோசைக்கு நெய் ஊத்த றேன்னானாம். ஏனய்யா, இப்படி ஒரு ஏமாத்துப் பிழைப்பு எத்தனை நாளைக்குத் தாங்கும்னேன்.

ரகுபதி: எவனய்யா ஏமாத்தினான்? இப்பவும் சொல்றேன். நம்ம பால்காரருக்குக் கவுண்டமணி சான்ஸ் காத்திருக்கு.

பால்: இப்படியே இன்னும் அம்பது வருஷம் வேண்டுமானாலும் நீங்க சொல்லிட்டிருங்க. வேணாம் ஸ்வாமி. எனக்கிருந்த கொஞ்ச நஞ்ச சினிமா ஆசையும் போயிடுச்சு. என்னோட பாக்கியைத் தள்ளிடுங்க. ஏதோ ஒழுக்கமா ஒரு பால்காரனாகவே பொழைச்சிட்டுப் போயிடறேன்.

மளிகை: இந்த ஆளோட பாக்கிக்காக அலைஞ்சு அலைஞ்சே நம்ம உடம்பு தேய்ஞ்சுப் போயிடும் போலிருக்கு.

ரகுபதி: அங்கேதான் ஒரு தத்துவத்தையே மறந்து பேசறீங்க. இப்ப நீங்க ஒரு இரும்புத் துண்டை எடுத்துத் தரையிலே போட்டுத் தேய்க்கறீங்க. அது தேயும். ஆனா அதே மாதிரி உங்களோட கையைத் தேய்ச்சுப் பாருங்க. தேயாது. இன்னும் பெரிசா வீங்கும்!

மளிகை: லட்சத்தில் ஒரு வார்த்தை. இந்தத் தத்துவத்தை உங்க மேலேயே சோதிச்சுப் பார்த்தா என்னன்னு மனசெல்லாம் துடிக்குது. நீங்க என்ன சொல்றீங்க பால்காரரே?

பால்: (ரகுபதியைப் பார்த்து) ஏன் சார், வருஷ ஆரம்பத்திலேயே ஏன் இப்படி உளறலா உளறிக் கொட்டறீங்க. அப்புறம் வருஷம் பூராவும் உளறிட்டே இருப்பீங்க.

ரகுபதி: அங்கேயும் ஒரு தப்புப் பண்ணிட்டீங்க. இப்ப, வருஷ ஆரம்பத்திலே நீங்க கல்யாணம் பண்ணிட்டீங்கன்னு வச்சுக்குங்க. அப்புறம் வருஷம் பூராவும் கல்யாணமா பண்ணிட்டே...

மளிகை: யோவ் நிறுத்தய்யா. நாங்கசெஞ்ச மகா பெரிய தப்பு, உம்மகிட்டே வந்து மாட்டிக்கிட்டதுதானய்யா. ச்சத்.

பால்: இவரோடு ஒரு பத்து நிமிஷம் பேசினா, எங்கே வந்தோம், எதுக்கு வந்தோம்'கறதே எனக்கு மறந்து போகுது. இவர் என்னோட பாக்கியைத் தரப் போறாரோ, இல்லையோ இன்னும் கொஞ்சநாள் இவர் பேசறதையே கேட்டுட்டிருந்தா பனியனைப் பிய்ச்சுட்டு நான் தெருத் தெருவா அலையப்போறது மட்டும் நிச்சயம்.

ரகுபதி: (தெருப் பக்கமாகத் திரும்பி) யோவ். அங்கேயே நில்லுய்யா. காலங்காத்தாலே வந்து நின்னுட்டா என்னத்தைப் போடறது? போ. நானு வீட்டுக்குப் போயிட்டு அப்புறமா வா... போ...

(அந்த ஆள் விடுவிடுவென்று கோபத்துடன் உள்ளே வருகிறார்.)

ஆள்: என்ன ஒரு திமிர் இருந்தா, என்னோட வீட்டிலேயே குடியிருந்துட்டு, என்னையே பிச்சைக்காரன்னு சொல்லுவே?

ரகுபதி: (திகைத்துப் போய்) சார்... சார்... நீங்களா...? மன்னிக்கணும்... என்ன சார், உடம்பு சரியில்லையா? தாடியும், மீசையுமா... ஆளே மாறிப் போயிட்டீங்களே!

வீ. காரர்: உனக்கு வீட்டைக் குடுத்துட்டு நான் இந்த அளவுக்கு இருக்கிறதே எங்க ஆத்தா செஞ்ச புண்ணியம்.

(பால்காரன், பொங்கி வரும் சிரிப்பைப் படாதபாடு பட்டு அடக்கிக் கொண்டிருக்கிறான்.)

மளிகை: (பால்காரனிடம் — மெதுவாக) சிரிக்கப்படாது. நாளைக்கு நமக்கும் இந்த நெலமை வராதுங்கறது என்ன நிச்சயம்?

வீ. காரர்: (ஆவேசம் வந்தவராக) இந்தாய்யா ரகுபதி. கடைசியாய்ச் சொல்றேன். இன்னும் ரெண்டு நாள் டயம் தர்ரேன். அதுக்குள்ளே ஆறு மாச வாடகை பாக்கியையும் எண்ணி வைக்கல்லே, அப்புறம்... அப்புறம்... (திடீரென்று இடுப்பைப் பிடித்துக் கொண்டு பயங்கரமாக இரும ஆரம்பித்து விடுகிறார். மளிகைக் கடைக்காரரும், பால்காரரும் அவரைக் கைத்தாங்கலாகப் பிடித்து நாற்காலியில் உட்கார வைக்கின்றனர்.)

பால்: என்ன சார், ஏதாவது இடுப்புகிடுப்பு புடிச்சிடுச்சா?

வீ. காரர்: இல்லையா ஏனவு, இந்த ரோஷங்கெட்ட மனுஷனை மெரட்டலாம்னு பழைய இரும்புக் கடையிலே எட்டணா குடுத்து ஒரு கத்தி வாங்கிட்டு வந்தேன். சமயத்திலே இடுப்பிலேருந்து எடுக்க வர மாட்டேங்குது.

மளிகை: (பால்காரனிடம்) நிலைமை இப்படியே போயிட்டிருந்தா அப்புறம்

பம்பாய் பஸ் போக்குவரத்துக் கார்ப்பரேஷன் சில்லரைத் தட்டுப்பாட்டைத் தவிர்க்கச் சில்லரைக்குப் பதிலாக பயணிகளுக்கு அதற்குரிய கூப்பன்களை வழங்குகிறது. இதனால் பஸ் பயணிகள் சிரமப்படாமல், மறுநாள் அதை மீண்டும் கொடுத்து டிக்கெட் கலபமாக வாங்கிக் கொள்ள முடிகிறது.

ஆதாரம்: 'டைம்ஸ் ஆப் இந்தியா.'

—ராஜேஸ்வரி.



சற்றே
நெருங்கி
உற்றுப்
பாருங்கள்






புதிய
ஸூப்பர் ரின்

கண்கவரும் புதிய மேலுறை!

புதுமை கமழும் நறுமணம்!

**ஸூப்பர் ரின்**
**அதிக வெளுப்பொளி பாய்ச்சுது-**

இதற்கு ஈடுநிற்க டிட்டர்ஜெண்ட் வில்லை எதுவுமே இல்லை!

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RIN 75 2013 TM

# ராலி:பேன் விசிறிகளின் உள்ளமைந்த மேம்பாடு இதற்கு உத்தரவாதம் உண்டு




முற்றிலும் சமநிலைப்
படுத்தப்பட்ட இயந்திர
நுணுக்கம் மிக்க
வடிவமைப்பின் காரணமாக,
ராலி:பேன் ஸுப்பர்ஸ்டார்
தொல்லையின்றி ஓடுகிறது






தொல்லையற்ற ஓட்டம் என்கிற கண்ணோட்டத்தில் பார்க்கிறபோது, ராலி:பேன் ஸுப்பர்ஸ்டார் இணையற்று விளங்குகிறது. டபுள் பால் பேரிங்குகள் இருப்பதால் மோட்டார் நீண்ட காலம் உழைப்பதோடு, இரைச்சலற்ற ஓட்டம் கிடைக்கிறது. பிளேடுகள் மிக நுணுக்கமாகச் சமநிலைப்படுத்தப் பட்டிருப்பதால், சீரான காற்றோட்டம் அளிக்கிறது. ஆல்-மெட்டல் ரெகுலேட்டர் என்பதால் நீடித்த உழைப்பு நிச்சயமாகிறது. ஆகவே பணியில் ஈடிணையற்ற விசிறி உங்களுக்குக் கிடைக்கிறது.

ஸுப்பர்ஸ்டார் மீது நம்பிக்கை வையுங்கள். இதன் செயல்திறனுக்கு இணையே இல்லை.

**ராலி:பேன்**

தரமோங்கிய தயாரிப்புகளுக்கு




**ராலீஸ்**

மல்ட்டி டெக்னாலஜி க்ரூப்

ULKA-RFC-2-82-TM

நாமும் வெறிபிடிச்ச குரங்கு மாதிரி அலைய வேண்டியதுதான்.

வீ. காரர்: (கோபத்துடன்) அப்போ, என்னை 'வெறி பிடிச்ச குரங்கு'ன்னு சொல்றீங்களா?

மணிகை: உங்களைச் சொல்லலே சார். கோபப்படாதீங்க. உட்காருங்க. நாம இப்படித் தனித்தனியா இருக்கிறவரைக் கும் இந்த ஆள் கிட்டேயிருந்து நம்மோட பாக்கியைக் கறக்கவே முடியாது. நாம மூணு பேரும் சேர்ந்து கூட்டணி அமைச்சா இந்த ஆளை உண்டு இல்லேன்னு செஞ்சுடலாம். என்ன சொல்றீங்க?

வீ. காரர்: எப்படியோ, எனக்கு பாக்கி வந்தா சரி.

பால்: எனக்கும் தான்.

மணிகை: அப்போ, என்னோடு நில்லுங்க. இந்தாய்யா ரகுபதி. மூணு பேரின்சார்பா சொல்றேன். இன்னும் ஒரு வாரம் அவகாசம் தர்றோம். அப்பவும் எங்களோட பாக்கியை நீ தீர்க்கலேன்னு.... அப்புறம்... எது நடந்தாலும் அதுக்கு நாங்க ஜவாப்தாரி இல்லே.

வீ. காரர், பால்: ஆமாம். நாங்க ஜவாப்தாரி இல்லே.

(மூவரும் விறைப்பாக நடந்து செல்கிறார்கள். ரகுபதி திகைத்துப் போய் சில நிமிடங்கள் நாற்காலியில் விழுந்து கிடக்கிறான். சுமதி வருகிறாள்.)

சுமதி: என்ன, மூணு பேரும் பட்டாளம் மாதிரி விறைப்பாப் போறாங்க?

ரகுபதி: ஏன், உனக்கு சல்யூட் அடிக்கலையா ஏண்டி. நீ வேறே என் வயித்தெரிச்சலைக் கிளப்பிட்டு.

(ஓர் இளைஞன் மெதுவாக வாசல் கதவைத் தாண்டி தலை நீட்டுகிறான்.)

இளைஞன்: சார்... நான்... எதிர்வீட்டிலே குடியிருக்கறவன்...

ரகுபதி: நீ எங்கேயோ குடியிருந்துட்டுப் போ. இங்கே என்ன வேலை?

இளைஞன்: சார்... நான்.. வந்து... ஒரு பெரிய ஃபைனான்ஸ் கம்பெனியிலே புரொபேஷனரி ஆபீஸரா இருக்கேன்.

ரகுபதி: அதைப் பத்தி நான் கேக்கலே. என்னோட கேள்விக்கு என்ன பதில்?

(இளைஞன் உள்ளே வந்தவாறே முதுகு மறைவிலிருந்து எதையோ எடுக்கிறான்)

சுமதி: (பதட்டத்துடன்) உள்ளே ஓடிவந்துடுங்க, அவன் கத்தியோ, துப்பாக்கியோ எடுக்கறான்.

இளைஞன்: அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே சார், மூவி கேமரா.

ரகுபதி: (ஆச்சரியத்துடன்) மூவி கேமராவா?

இளைஞன்: ஆமாம் சார். இத்தனை நேரமும் இங்கே நடந்ததையெல்லாம் எதிர்வீட்டிலேருந்து டெலிலென்ஸ் போட்டு உங்களுக்குத் தெரியாம படமா எடுத்திட்டிருந்தேன்.

ரகுபதி: என்னது?

இளைஞன்: ஆமாம் சார், எங்க கம்பெனியிலே புதுசா ஒரு சீட்டு இன்ட்ரட்யூஸ் பண்றோம். மாசம் நூறு ரூபாய். ஒவ்வொரு மாசமும் குலுக்கல் வச்சு, அதில்



கல்கத்தாவிலிருந்து மேல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களில், நம்மைத் திடுக்கிட வைக்கும் பொருளும் ஒன்று உண்டு. அது என்ன தெரியுமா? மனித எலும்புக் கூடு! நல்ல எலும்புக் கூடு ஒன்று 2240 ரூபாய் வரை விலை போகிறது! மருத்துவமனைகளுக்கும், மருத்துவ ஆராய்ச்சிக்கழகங்களுக்கும், மேலைநாடுகளில் இவை மிகவும் தேவைப்படுகின்றன!

ஆதாரம்: மிர்ரர்.

தகவல்: ஆர். மார்க்கண்டன்

செலக்ட் ஆனவங்களுக்கு முழுப்பணத்தையும் குடுத்துடுவோம்.

ரகுபதி: நீங்க என்னை ரொம்பக் குழப்பறீங்க.

இளைஞன்: எங்களோட இந்தப் புதுத்திட்டத்தை விளம்பரப்படுத்தறதுக்காக ஒரு துண்டுப்படம் எடுக்கறதுன்னு முடிவெடுத்தோம். எதிர் வீட்டிலிருந்து தினமும், உங்க வீட்டு வராண்டாவில் நடக்கிறவிவகாரங்களைப் பார்த்ததும், எனக்கு இந்தப் புது ஐடியா தோணிச்சு. உண்மையிலேயே இன்னைக்கு நீங்க எல்லாருமாச் சேர்ந்து அமர்க்களம் பண்ணிட்டீங்க.

ரகுபதி: (அழாத குறையாக) என்னோட பஞ்சப்பாட்டுக்கும், உங்க பரிசுச் சீட்டுக்கும் என்னய்யா சம்பந்தம்?

இளைஞன்: இனி, எங்க கம்பெனியோட முதல் குலுக்கலில் எதிர்பாராத விதமா உங்கப் பேர் விழுந்து, நீங்க எல்லாக் கடனையும் மகிழ்ச்சியா தீர்த்துடறதாக் கதையை முடிக்கப் போறேன்.

ரகுபதி: நீங்க ஃபிலிம்லே கதையை முடிச்சிட்டுப் போயிடுவீங்க. அப்புறம் நெஜ வாழ்க்கையிலே கடன்காரங்கிட்டே முழிச்சிட்டு நிக்கறது யாரு? அட போங்க சார்.

இளைஞன்: நீங்க ஏன் சார் முழிக்கணும். இதுவரைக்கும் படம் இயற்கையா அமைஞ்ச மாதிரி, இந்த சீனும் அமைய வேண்டாமா? அதனால உங்க கடன்பாக்கிக்கு உண்டான பணத்தையும் உங்க கையிலேயே குடுத்து — நீங்க கடன் தீர்க்கிற காட்சியையும் — இயற்கையாகவே எடுத்துடறோம். உங்க உதவிக்கு எங்க அன்பளிப்பா... ஓ. கே...

(சந்தோஷத்தில் தள்ளாடி விழப் போன ரகுபதியை ஓடி வந்து தாங்கிக் கொள்கிறாள் சுமதி.)

# பயன் தந்த



வீட்டில் விசேஷம். விருந்தினர் கூட்டம் கூடியிருந்தது. சமையல் வேலையில் மும்முரமாய் ஈடுபட்டிருந்தபோது இடையில் யாரோகாப்பிகேட்டார்கள். சர்க்கரை பாட்டிலை எடுத்துத் தருமாறு என் தங்கையைப் பணித்தேன். அரட்டை அடித்துக்கொண்டிருந்த அவள் நான்கைந்து முறை கூப்பிட்டும் வராததால் கோபமுற்றுக் கத்திவிட்டேன். இதைக் கண்ணுற்ற என் அண்ணன் **உதடு தேய்வதை விட உள்ளங்கால் தேயலாம்'** என்றார். அப்போது எனக்கு ஆத்திரம் வந்தாலும் உள்ளத்தில் ஓர் உறுதி பிறந்தது.

சென்னை-20. டி.எஸ்.லக்ஷ்மி



மருத்துவக் கல்லூரியில் என் மகனுக்கு இடம் கிடைத்தது. ஆனால் பணம் பற்றாக்குறை. யாரிடம் கேட்பது என்று தெரியாமல் விழித்துக் கொண்டிருந்த போது என் தம்பி ரூ. 2000 கொடுத்து உதவினான். பதினெட்டே வயது நிரம்பிய அவன் வீடுகளுக்குப் பத்திரிகைப் போடும் தொழில் செய்கிறான். **தம்பியுடையோன் படைக்கு அஞ்சான்** என்பது என் வரை மெய்யாயிற்று.

இராஜபாளையம்,

கே. விஜயலட்சுமி.

வகுப்புத் தலைவியாகிய என்னை கரும்பலகையில் ஒவ்வொரு நாளும் ஒரு பழமொழி எழுத வேண்டும் என்று கூறியிருந்தார் ஆசிரியை. ஒரு நாள் எழுதத் தவறிவிட்டேன். கோபமுற்ற ஆசிரியை அந்த வகுப்பை நடத்தாமல் வெளியேறி விட்டார். அடுத்தது ஆங்கில வகுப்பு. **To err is human; to forgive divine! (பிழை செய்தல் மனித இயல்பு — அதை மன்னித்தல் தெய்வ இயல்பு)** என்று எழுதி வைத்தேன். வகுப்பறையில் நுழைந்த ஆசிரியையின் முகத்தில் புன்னகை அரும்பியதைக்கண்ட எங்களுக்குப் பரம திருப்தி.

பம்பாய்.

அகிலா சிவநாராயணன்.





ஒரு சமயம் அக்கா, அண்ணா குழந்தைகளைப் பார்த்துக் கொண்டு வீட்டில் இருந்தேன். எல்லோரும் தூங்கியதும் 'நைட் ஷோ' செல்லத் திட்டமிட்டிருந்தேன். இது தெரிந்ததும் அக்கா பையன் தங்கையையும் அழைத்துப் போகுமாறு சொன்னான். நைட் ஷோ பார்த்தால் கண் வலிக்கும் என்று சாக்குச் சொல்லி அவனைத் தூங்க வைக்க முயன்ற போது. **"எல்லோரையும் சொல்லும் பல்லி தானே கழனிப்பானையில் விழுமாம்"** என்ற பழமொழியை உதிர்த்து என்னை அயர்த்தி விட்டான். அன்றிலிருந்து நைட் ஷோ போவதில்லை!

திருச்சி-18 சந்தோஷ்குமார்



கடந்த மூன்று வருடங்களாக சுமார் அரை நூறு பெண்களைப் பார்த்தும், சரியான காரணம் இன்றி நிராகரித்து வந்தார் என் அண்ணன். சமீபத்தில் வந்திருந்த பெரிய பாட்டி, **பல மரங்கண்ட தச்சன் ஒரு மரமும் வெட்டான்** என்று அவனிடம் அதட்டலாகக் கூறினாள். அடுத்த வாரமே அண்ணன் ஒரு பெண்ணைப் பார்த்துத் திருமணத்துக்குச் சம்மதித்து விட்டான்!

சேலம்—5. கே. சுமதி.

நான் தொலைபேசி இயக்குனராகப் பணியாற்றிக் கொண்டிருந்த போது ஒரு சம்பவம் நிகழ்ந்தது. ஒவ்வொரு நாளும் ஈரோடுக்கு **Fixed Time Call** போடப்படும். ஒருநாள், மேலதிகாரி அவசரமாக வந்து ஈரோடு **FTC** ஏன் கொடுக்கவில்லை என்றுக் கோபித்துக் கொண்டார். அதற்கான டிக்கெட் என் போர்டில் இல்லை என்று நான் சுட்டிக் காட்டியதும் வேறொரு போர்டிலிருந்து டிக்கெட்டை எடுத்துக் கொடுத்து விட்டு மீண்டும் கடிந்துக் கொண்டார். செய்யாத தவறுக்கு வசவு வாங்கிய நான் **"ஓடிப்போனவனுக்கு ஒன்பதாமிடத்தில் குரு, அகப்பட்டவனுக்கு**

# பழமொழி

**அஷ்டமத்தில் சனி''** என்று சலித்துக் கொள்ளவும் மேலதிகாரி கோபத்தை மறந்து சிரித்துவிட்டார்.
தருமபுரி எஸ்.எஸ்.சரஸ்வதி





வீட்டில் ஆங்காங்கே வைத்த சாமான்களும் சில்லரைக் காசும் அடிக்கடி தொலைந்து போனதால் வேலைக்காரியைத் திட்டிக் கொண்டிருந்தோம் (அவள் இல்லாத போது தான்) என் அம்மாவும் நானும். உடனே என் தந்தை ''நல்லா இருக்கே நீங்க சொல்றது: **திறந்து கிடக்கிற நகைப் பெட்டி ஞானியையும் திருடத் தூண்டும்''** என்றார்: பொருள்களைக் கைக்கு எட்டினாற் போல் வைத்தால் ஏழை சம்சாரிக்கு எடுக்கத் தான் தோன்றும் என்பது அப்போது எங்களுக்கு உறைத்தது.
ஸ்ரீவைகுண்டம். வி.ரெங்கம்

நெரிசல் நேரத்தில் பஸ் ஒன்றில் ஏறி முன்னால் இருந்த சீட்டில் போய் அமர்ந்தேன். கண்டக்டர் தன் இருக்கையை விட்டு



எழாமல் என்னை எழுந்து வந்து டிக்கெட் வாங்கச் சொன்னார். நான் அசைந்து கொடுக்கவில்லை. முறைப்படி ஏறிவந்து தானே அமர்ந்தேன். கண்டக்டரே வந்து டிக்கெட் கொடுக்கட்டும் என்றிருந்தேன். எவ்வளவு நேரம் தான் அவர் பிடிவாதம் பிடிக்க முடியும்? **கத்தரிக்காய் மலிந்தால் கடைத் தெருவுக்கு வந்து தானே தீரவேண்டும்!** அந்த 'ஸ்டேஜு'க்கான தூரம் முடிந்து அடுத்த 'ஸ்டேஜை' பஸ் நெருங்குகையில் அவர் எழுந்து வந்து எனக்கு டிக்கெட் வழங்கினார்!
சென்னை—35. சி. பூபால்சிங்.

என் நண்பன் சீனுவுக்கு சரோஜா என்ற பெண்ணிடம் காதல்.



ஆனால் அதை அவளிடம் சொல்லத் தயக்கம். ஒரு கல்யாணத்தில் நாங்கள் இருவரும் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது சரோஜா உப்புப் பரிமாற வந்தாள். நான் நண்பன் காதில் ஒரு பழமொழியைச் சொல்ல அவன் சரோஜா பரிமாறும்போது அதை உதிர்த்தான்: **உப்பிட்டவரை உள்ளளவும் நினை** என்று அவன் கூறக்கேட்டு அவள் முகம் நாணத்தால் சிவந்தது. அடுத்த மாதமே அவர்கள்திருமணம்நடந்தது
புதுதில்லி. கே.வி.பி.ஹரன்



**ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் பண்ணலாம்** என்பார்கள். இதற்கேற்ப ஒரு சம்பவம் நடந்தது. ரொம்ப அழகான ஏழைப் பெண் ஒருத்திக்குக் கல்யாணம். முகூர்த்தம் நெருங்கும் சமயம் காலில்பால் தெளிக்கும்போது பெண்ணுக்கு யானைக் கால் இருப்பதைப் பார்த்துக் கல்யாணத்தை நிறுத்த வேண்டும் என்று கூறி விட்டனர். நாங்கள் ஓடிச் சென்று ஒரு மருத்துவரை அழைத்துவந்தோம். எங்கள் வேண்டுகோளுக்கு இணங்க அவர் மணப்பெண்ணுக்கு யானைக்கால்இல்லை என்றும் வெறும் கொசுக்கடி வீக்கம் தான் என்றும் பொய் சொல்லி சம்பந்தியைச் சம்மதிக்கச் செய்து விட்டார். இப்போது அந்தத் தம்பதி நல்லபடியாக இருப்பதை அறிந்து மகிழ்கிறோம்.
கல்கத்தா.
சி.என்.கிருஷ்ணன்.

# ஜங்ஷனிலே ஒரு

17

"ஹரி."

வெளியே களத்தில் கட்டிலில் படுத்திருந்த ஹரிக்கு முதலில் அது காதில் விழவில்லை.

''ஹரீசு'' என்று நீட்டி முழக்கிக் கொண்டு கூப்பிட்டாள் ஜெயா.

கட்டிலில் ஒந்திரித்துப் படுத்திருந்த ஹரி வானத்தில் மின்னிய நட்சத்திரங்களை விட்டு பார்வையைச் சிவுக்கென்று திருப்பிக் கொண்டு ''என்ன ஜெயா?'' என்று பதறிப் போய்க் கேட்டான்.

''எங்க போய்ட்டாரு ஒங்க அண்ணுத்தை?'' என்று உலக்கையில் இடித்துக் கொண்டிருந்தவள் அதை நிறுத்தி விட்டுக் கேட்டாள்.

காசி எங்கே போனான் என்று ஹரிக்குத் தெரியும்.

''சும்மா வாக்கிங் போய்ட்டு வரலாம் வாங்க'' என்று எஸ்தர் ரயில்வே லைன் பக்கமாக நடந்து போய்வர அவனை அழைத்துச் சென்றிருந்தாள்.

அதை இவளிடம் சொல்வது சரியல்ல என்று ஹரிக்குத் தோன்றிற்று.

''கடையாண்ட ஒக்காந்துன்னு இருந்திட்டு டீ குடிக்கப் போனேன். அப்படியே ரயில்வே சினேகிதருங்க புடிச்சுக்கினுங்க. திரும்பி வந்து பார்த்தா கடை போட்டுட்டு இருந்துது...''

''ம்ம்ம்.''

ஹரி அங்கே வந்து மூன்று நாட்கள் ஆகிவிட்டன. ஜெயாவிடம் ஏதோ ஒரு மாற்றம் தெரிந்தது. அவள் காசியைப் பற்றி ஹரியிடம் விரிவாகப் பேசவில்லை. அவன் எங்கே போகிறான் எங்கே இருக்கிறான் என்று சிறுசிறு தகவல்களைக் கேட்பதோடு சரி.

ஜெயாவிடம் காசி தன் மனதில் அவளைப் பற்றி வைத்திருந்த நினைப்பைத் தெளிவாக வெளியிட்டு விட்டான் என்று அவனுக்குத் தெரியும். அந்த எண்ணம்தான் ஹரிக்கு ஒரு விலங்கு போட்ட மாதிரி இருந்தது.

எஸ்தருக்கும் காசிக்கும் மத்தியில் ஓர் உறவு வளர்ந்து கொண்டு போவது இவனுக்குத் தெரியும். அதைத்தான் தடுக்க முடியாது என்று புரிந்து கொண்டு மௌனமாகி விட்டானா? கண்ணாடி வீடு போன்று இவனுக்குள் கட்டியிருந்த கூடு சிதறி நொறுங்கிய சோகத்தை இவன் எப்படித் தாங்கிக் கொண்டான்? இப்படியெல்லாம் ஏன் நடக்கிறது...? இந்த உலகத்தில் பாத்திரம் தெரியாமல் ஏன் ஆசை வைக்கிறார்கள்? அதுவும் ஜெயா...

''நேரத்தோட வூட்டுக்கு வந்து சாப்பிட்டுப் படுத்தா தான் நமுக்கு நிம்மதியாகீது.''

அவள் உலக்கையை மாற்றிமாற்றிப் போட்டுக் கொண்டே சொன்னாள்.

''என்னாத்த இடிக்கிறே?''

''என்னுண்டைக்குக் களக்கா இடிக்கறேன்.''

அந்த என்னுருண்டை ஜெயாவின் ஸ்பெஷல். வேர்க்கடலையையும் எள்ளையும் வெல்லத்தையும் சேர்த்து இடித்து அவள் உருண்டை பிடித்தால் ஹரிக்கு மிகவும் பிரியம்.

''அந்தச் சின்னம்மாவை இடிச்சுக்குடுக்கச் சொல்லக் கூடாது.'' தனக்காக அவள் கை நோக இடிப்பது ஹரிக்கு வருத்தம் தந்தது.

''அவ கிட்டே தான் சொல்லிட்டிருந்தேன். சாயங்காலம் அவங்க சொந்தக்காரரு சாவுண்ணு வந்து சொல்லிட்டுப்பூட்டா..''

''நான் வந்து இடிச்சுத் தரட்டா..''

''ஓ... வாயேன். ஆனா இதோட பூடக் கூடாது. பாத்திரத்தைத் தேச்சுக்கணும். காத்தாலிக்கு இட்லி அடுப்பைக்கவனிச்சுக்கணும் வியாபாரம் பாத்துக்கணும். கல்லாக்கட்டி சரக்கு வாங்கியாரணும். அத்தினியும் பாத்துக்கறதா இருந்தா சொல்லு... நான் சேர் போட்டுனு ஒக்காந்துக்கறேன்.''

''தெனும்மா நீ சேர்ல ஒக்கார்றதா இருந்தா நான் அல்லாத்தையும் செஞ்சு தர்றேன். சொல்லு ஒக்காருவியா?''

''அப்பப்பா.... அது மட்டும் வேணாண்டா சாமி. எவ சேர்ல ஒக்கார்ந்துக்கினு கைகால் மொண்டியாட்டம் சொம்மா கெடக்கிறது.''

அதைச் சொல்லிவிட்டு ஜெயா 'உஸ்ஸோ... உஸ்ஸோ.... உஸ்ஸோ.... உஸ்ஸோ' என்று உலக்கை போடும் சங்கீதத்தைத் தொடர்ந்தாள்.

சற்று நேரம் கழித்து உலக்கையை நிறுத்தி விட்டு ''நீ வேணும்னா ஒரு நடை போயி ஜங்சன் வரிக்கும் பாத்துட்டு வர்றியா.... இந்த மனுசர நம்ப முடியாது. எவங்கிட்டியாவது ரேங்கிக்கினு சண்டை வலிச்சிடுவாரு... அது அந்தப் பாளாப் போனவன்

---

''எனக்கு மட்டும் அதிகாரம் இருந்தால் இதைத் தேசிய பானம் ஆக்குவேன்'' என்று சொன்னார் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ். அது தமிழ் நாட்டு மிளகு ரசம்!

—மஞ்சுதேவன்.



ஆளா இர்ந்துட்டா. அவனுங்க இன்னு பண்ணுவாங்களோ?'' என்றான்.

காசிக்கு யாரும் தன்னைத் தேடி வருவது இப்போது பிடிக்கவில்லை. கூட வருவது கூடப் பிடிக்கவில்லை.

''அண்ணாத்தைக்கி கோவம் வந்துடுமே ஜெயா...''

''அதுவும் சர்தான்... இன்னும் ஒரு அரை 'அவுரு' பாப்பம்... ஆமா, நீ வளை யலு கொண்டு போனியே அக்கா இன்னு சொல்லிச்சி?''

எஸ்தரை விசாரிக்கிறான் என்று புரிந்து கொண்டான் ஹரி.

''ரொம்பப் பிரியமா வாங்கிக்கிச்சி. அடடா. அது மூஞ்சி மலர்ந்ததைப் பாக்க ணுமே. என்னமோ தங்கவளையலைப் பாக்கற மாதிரி இர்ந்தது...''

''அப்படியா?'' என்று ஆவலோடு கேட் டான் ஜெயா. அவன் முகத்தில் ஒரு பர வசம் படர்ந்தது.

''என்னமோ அவசரத்துக்கு ரெண்டு டஜன் வாங்கிட்டேன். வளையல்காரு அடுத்த சந்தைக்கி வர்றப்ப புதுப்புது டிஸைன்லாம் கொண்டாறேன்னுரு.''

''சைஸ் வளையல் வச்சிருக்கே இல்லே?''

''ஓ... மாடத்திலே தான் கீது... அடுத்த பொதங்கெளமை நல்ல டிசைனு ரெண்டு டஜன் வாங்கணும். பாரேன், கோயமத் தூர்ல பாலிடெக்னிக் படிச்ச பொண்ணு.... எத்தினி வளையலைப் பாத்திருக்கும்... எவ் வளோ டிசண்டா இர்ந்திருக்கும். நாம குடுத்தா பொன்னுட்டம் வாங்கிக்குதே!''

''நல்ல பொண்ணு'' என்று ஹரியும் ஒத்து ஊதினான்.

''ஒரு நாளைக்கி இட்டாறச் சொன் னேனே.... இன்னு சொல்லிச்சு?''

''நாளைக்கி இட்டாறட்டா? கூப்பிட்டா வந்துடும். அதுக்கு ஓம்மேலே ரொம்பப் பிரியம்.''

ஜெயா புன்முறுவல் செய்தான். அப்படி ஒரு பிரியம் கிடைத்ததில் அவனுக்குப் பரம திருப்தி என்று உதட்டில் தோன்றிய ஒளி அறிவித்தது.

''நாளைக்கி வாணும்.... அந்த வெடைக் கோழியை சின்னம்மா ஊர்லருந்து வந்ததும் அறுத்துடச் சொல்றேன். அன்னிக்குச்கோழி பிரியாணி பண்ணி அக்காவக் கூட்டியாந்து போடலாம்.''

''அடிச் சக்கை... ஏதோ ஒங்க எஸ்தர் அக்கா தயவுலே எனக்கும் கோழி பிரியாணி கெடைக்கப் போவுது...''

''த... த... த... நீ ஏன் நடுவுலே வந்து பூர்றே? அனியாத ஊட்டுக்கு வந்து அடுத்த எலைலே பருப்பு போடுன்னு அதிகாரம் பண்றவராட்டம்.''

சாலையில் ஒரு கார் வந்து நிற்கும் ஓசை கேட்டது. கதவைத் திறந்து யாரோ அடித்துச் சாத்தும் ஒலி தொடர்ந்து.

''ம்ஹூம்ஹூம். யாரும் எறங்க வாணும்'' என்று யாரோ பேசும் குரல் மங்கலாகக் கேட்டது. அது காரிலிருந்து இறங்கமுனைந்த வர்களை தடுக்கும் அதிகாரம்.

''டார்ச்லைட்டைப் போடட்டுமா?'' என்று சற்று பயந்த கிசுகிசுத்த குரலில் கேட்டான் ஜெயா.

ஹரிக்கு அந்தக் குரலில் ஒலித்த பீதி தான் முதலில் அதிர்ச்சி தந்தது. அவன் உடம்பில் ரத்தம் ஜில்லென்று தலைக்கு ஏறியது.

ஹரி எழுந்து நின்றான்.

அதற்குள் உலக்கையைக் கையில்எடுத்துக் கொண்டே உள்ளே போய் டார்ச்லைட்டைப் போட்டான்.

சில்க் ஷர்ட்டும் மஸ்லின் வேஷ்டியுமாக வில்வம் ஒற்றையடிப்பாதையில் தனியாக இறங்கி வந்தான். டார்ச்லைட் வெளிச்சத் தால் அவன் நிழல் அவன் நடந்து வந்த பாதையின் பின்னால் நீண்டு விழுந்தது.

ஹரியின் உடம்பில் முறுக்கு ஏறியது. இது வரை அவன் அனுபவியாத ஒரு கொதிப்பு தனக்குள் பரவுவதை அவன் அறிந்தான்.

''யாரது... ஓ, ஹரியா?''

ஹரி பதில் சொல்லவில்லை. கால்களைப் பூமியில் ஊன்றிக் கொண்டு நின்றான்.

''காசி இல்லே.''

''இல்லே.''

''எங்கே போயிருக்கான்?'' வில்வம் வெகு இயல்பாகக் கேட்டான். அதைக் கேட்டால் அவன் ஒரு விவகாரம் பேச வந்தவன் மாதிரி தென்பட்டது.

''தெரியாது!''

''எப்ப வருவான்?''

''தெரியாது.''

''இன்னு ஹரி... ரொம்ப ரப்பா- பேசறே.''

ஹரி அவனை ஊடுருவித் துளைத்து விடுவது போல் பார்த்தான்.

''பதில் சொல்லலேன்னு உடு.''

அவன் தூரத்தில் நின்றவன், கொஞ்சம் கூட அதைப் பொருட்படுத்தாதவன்போல் கட்டிலை நோக்கி நடந்து வந்தான். அவனிட மிருந்து செண்ட் வாசனை வந்தது.

''எப்பிடியும் வருவான் இல்லே.''

''சொல்ல முடியாது.''

''இருக்கட்டும். அவன் வர்ற வரிக்கும் நான் குந்திக்கினு இருக்கேன்.''

---

மாடுகளின் வயதை அதன் பற்களைப் பார்த்துக் கணக்கிடுவது போல் கலை மான்களின் வயதை அவற்றின் கொம்பு களில் உள்ள கிளைகளைப் பார்த்துக் கணக்கிடுகிறார்கள்.

எஸ். விஜயா சீனிவாசன்



# "அம்மா, இது புது டூத்பேஸ்ட்டா?"






## இல்லம்மா கண்ணு,
## இது நாம் எப்போதும் வாங்கும்,
## உனக்குப் பிடித்தமான
## பினாகா ஃப்ளோரைட் தான்
## இப்போது அழகான புதிய பேக்கில்!

பினாகா ஃப்ளோரைட் உண்மையிலேயே பல்லின் எனாமலோடு கலந்து, உங்கள் பற்களைப் பலப்படுத்துகிறது. பற்சிதைவையும் வலிதரும் சொத்தையையும் தடுத்து நிறுத்துகிறது. பினாகா ஃப்ளோரைட் உபயோகித்து உங்கள் பற்களுக்குப் பாதுகாப்பளியுங்கள். இன்றே வாங்குங்கள்.

உங்கள் பற்கள் பல்லாண்டு வாழ

**பினாகா ஃப்ளோரைட்**
டூத்பேஸ்ட்

இந்தியாவின் முதன் முதல் சக்தி வாய்ந்த ஃப்ளோரைட் பற்பசை

ULKA-HCG- 4 -84 TAM

## மேலும் ஒன்று

சாக்ரடீஸ் சிறை வைக்கப்பட்டிருந்தார். அப்போது ஒரு நாள் அவர் அறைக்குப் பக்கத்து அறையில் இருந்த கைதி ஒரு நரம்பு வாத்தியத்தை மீட்டி கொண்டிருந்தான். சாக்ரடீஸ், அந்தக் கைதியிடம், தமக்கு அந்தவாத்தியத்தை வாசிக்கும் விதத்தை கற்றுத் தருமாறு வேண்டினார்.

'மரண தண்டனை பெற்று விரைவில் உயிரிழக்கப் போகும் உங்களுக்கு, இதைக் கற்றுக் கொண்டால் என்ன பயன்?' என்று கேட்டான் அக்கைதி.

''நாம் இறப்பதற்குள் மேலும் புதிதாக ஒன்றைத் தெரிந்து கொண்டுவிட்டோமே என்ற திருப்திதான்!'' என்றார் சாக்ரடீஸ்.



கமலா மாரியப்பன்.

---

வில்வம் ஹரியின் அனுமதியை எதிர்பாராதவன் போன்று நேரே போய்க் கட்டிலின் மீது உட்கார்ந்தான்.

ஹரிக்கு அவன் ஆணவம் பிடிக்கவில்லை... உள்ளே ஜெயா இருக்கிறாள். இவன் எந்த நோக்கத்தில் வந்திருக்கிறான்? காரில் எத்தனை பேர்?

''இன்னு முதுகிலே காயம் பட்டுடிச்சாமே — பசங்க சொன்னாங்க...?''

அவன் கேள்விகளை ஹரி சிறிதும்பொருட்படுத்தாமல், ''நீ இன்னைத்துக்கு வந்துருக்கே?'' என்றான்.

வில்வம் சிரித்தான்.

''பொண்ணு கேக்க வந்திருக்கேன்.''

குபீரென்று பெட்ரோல் தீப்பற்றியது போல் ஒரு சீற்றம் ஹரியினுள் எழுந்தது...

''எழுந்துருடா...'' என்று ஆங்காரத்தோடு கத்தினான் ஹரி.

விசுக்கென்று வில்வம் சிறுத்தைபோல் எழுந்தான்.

''வாய்க் கொழுப்பா... கொழுத்திடுவேன்.''

''ஏய்... ஏய்... ஹரி... இன்னைப்பாஇது. நீயா பேசறே?''

வில்வம் ஹரியின் பெரிய உருவத்தையோ அவனது வலிமையையோ கண்டு ஒரு போதும் அஞ்சியதில்லை. அவனை ஏதோ ஒதிய மரமாக வளர்ந்துவிட்டவன் என்று தான் எண்ணிவந்தான். அவன் குழந்தைத் தன்மை சமாதானப் போக்கு இதையெல்லாம் கேள்விப்பட்டு அவன் மீது துளிக்கூட பயம் இல்லாமல் தான் இருந்தான். இந்த மாற்றம் அவனை வியப்பில் ஆழ்த்திற்று.

''ஹரி... ஒனக்கும் எனக்கும் ஒரு தகராறும் இல்லே.''

''இப்ப தகராறு... இதோ இந்த நிமிஷம்.''

அவனுக்கு எஸ்தர் தன் வீட்டில் அடித்துப் போட்ட தேனின் ஞாபகம் வந்தது.

வில்வம் விஷப்பாம்பு. அடிபட்டு விட்டுப் பழிவாங்க அலைந்து வந்திருக்கிற பாம்பு. பந்தோபஸ்தைத் தெருவில் நிறுத்திவிட்டு ஒரு பெண் விட்ட சவாலை ஒரு சவடாலுக்காக நிறைவேற்ற வந்திருக்கும் கோழைப் பாம்பு.

நினைக்க நினைக்க ஹரிக்குள் ஏதோ பல யானைகளின் பலம் ஊறுவது போன்று ஒரு கொந்தளிப்பும், வலிமையின் செருக்கும் எழுந்தன.

''காசியண்ணுத்தய இன்னுடா பழிவாங்கறே... நீ ஆம்பிளேதானே... பொட்டை இல்லியே... இதோ காரிலே நிக்கிறானுங்களே அத்தினி ஆம்பிளேயும் வரச்சொல்லு... வாங்கடா... வந்து மொதல்லே என்னைப் பலி வாங்கிட்டு அப்புறமா... அண்ணுத்தை இட்டே போங்க...''

ஹரி உறுமிக் கொண்டு நின்றான்.

''டேய் ஹரி... நான் இங்கே பழிவாங்க வரல்லே...'' என்று வில்வம் ஓரடி பின் வாங்கினான்.

ஹரியின் ஆவேசம் கட்டுக்கடங்கவில்லை.

அவன் பாய்ந்து சென்று வில்வத்தைக் காலரோடு பிடித்துப் பூமியிலிருந்து மேலே உயர்த்தினான்.

அதற்குள் ஜெயா வீட்டின் உள்ளேயிருந்து வெளியில் விடுவிடுவென்று ஓடிவந்தாள். அவள் ஏன் வருகிறாள்... எப்படிவருகிறாள் என்று திரும்பிப் பார்க்கும் பொறுமையின் எல்லையை ஹரி முழுக்கக் கடந்துவிட்டிருந்தான்.

ஜெயாவின் கையில் உலக்கைத்தடி இருந்தது. அதனால் ஓங்கி வில்வத்தின் பூமியை விட்டு உயர்ந்த தலை மீது ஒரே போடாகப் போட்டாள்.

''அம்மா'' என்று வில்வம் கத்தியதும் ஹரி அவனைத் தொப்பென்று கீழே போட்டு விட்டான்!

(தொடரும்)







# தேங்காய் விலை குறைய...

● 'கடவுள் எப்போதும் தூங்குவதில்லை' — என அழகாக முடிக்கப்பட்டிருந்த 'சுட்டத்துக்கு அப்பால்' நன்றாக இருந்தது.
திண்டுக்கல்,
எஸ். பி. தியாகராஜன்.

● மின்வெட்டு வரக்கூடிய நேரத்தில் மின்சார அமைச்சரைப் பேட்டி கண்டு பயனுள்ள பதில்களை வரவழைத்திருக்கிறீர்கள். கட்சி அடிப்படை இல்லாமல் நடுநிலையோடு தாங்கள் கேட்டிருக்கும் கேள்விகளும் அதற்கு அவர் பதில்களும் பயனுள்ளவை. மக்கள் தெரிந்து கொள்ள வேண்டியவை.
பட்டீச்சரம்,
பி. நெடுஞ்செழியன்

● தென்னை மரம் எவ்வளவு உயரமோ, தேங்காய் விலையும் அந்த உயரத்திற்கு இருக்கிறது. தேங்காய்விலை குறைய என்ன வழி? முதலில் உள்நாட்டு உபயோகத்திற்குத் தேவையானது போகத்தான், வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்ய வேண்டும்.
சென்னை—5.
எஸ்.வி. ராஜசேகர்.

● அபிமானவல்லியில் குறளப்பர் பற்றிப் படித்தேன். திருக்குறள் மூலம் ஜோதிடம் கூறி வரும் திப்பிராஜபுரம் ரவீந்திரன் திருக்குறளைநாடி ஜோதிடம் போலப் பயன்படுத்தி வருகிறார். பலன் கூறி வருகிறார். இதை அவருக்கு விளம்பரம் தேடி எழுதவில்லை. குறளப்பர் கதைப் பாத்திரத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டுவதாய் இது அமைவதால் எழுதினேன்.
பழமானேரி, சுந்தரராமன்.

● கட்டித் தங்கமான தலையங்கத்திற்குப் படுகட்டியான தலைப்பு. 'சினிமா மாயை' இன்று நாட்டில் எவ்வளவு தூரம் 'அரை வேக்காட்டு அரசியலைப்' புகுத்தி விட்டது என்பதைத் தலையங்கம் மட்டும் உணர்த்திப் படவில்லை. பொது மக்களும் உணர்ந்து கொண்டு சிந்திக்க வேண்டும்.
ஸ்ரீரங்கம் பத்மாகோபாலன்

● சென்னை ஐ. ஐ. டி. யில் அலை மின்சாரம் பற்றி தாங்கள் ஆய்வு நடத்தி வருவதைக் குறித்து எழுதப்பட்ட கட்டுரைக்கு நன்றி. இதில் உற்பத்தி செய்யக் கூடிய மின்சாரம் 300 முதல் 500 கிலோவாட் என்று இருக்க வேண்டும்: மெகாவாட் அல்ல.
சென்னை—36 எம்.ரவீந்திரன்



● நடுப்பக்க ஆராதனையில் நயமிருந்தாலும் ஆங்காங்கே குறும்பும் கொப்பளித்தது. பேராசிரியர் கல்கியின் சங்கீத சௌவிமரிசனங்கள் தாம் பளிச் சென்று நினைவுக்கு வந்தன.
சென்னை—14,
ஐயாறு எஸ். வாசுதேவன்.

● ஒரு மாணவி மற்றொரு மாணவியை பேட்டி காண்பது புதுமையாயும், நகைச்சுவையாயும் இருந்ததோடு மட்டுமல்லாமல், இந்த வாரம் மாணவர் பக்கம், ஸடையர் பக்கமாகவும் ஜொலித்தது.
விருத்தாசலம்—1.
நாகை. பொன்னி.

● கல்கி 5.2.84 இதழில் கடைசிப் பக்கத்தில் இடம் பெற்ற என்னுடைய துணுக்கு என் பெயரில் சாவி (5.2.84) இதழிலும் பிரசுரமாகியுள்ளது. தவறு நேர்ந்தமைக்குத் தங்களிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன்!
மதுரை—1
சி. எல். ரவிச்சந்திரன்.

(துணுக்கு எழுத்தாளர்கள் ஏற்கப்படாத தங்கள் துணுக்குகளைத் திரும்பப் பெற போதிய தபால்தலைகள் வைத்து அனுப்ப வேண்டும் அவற்றைத் திரும்பப் பெற்ற பிறகே வேறு பத்திரிகைக்கு அனுப்ப வேண்டும். காப்பி அடித்துத் துணுக்குகளை அனுப்புவதையும் தவிர்க்க வேண்டும். இவ் விஷயங்களில் துணுக்கு எழுத்தாளர்களின் முழுமையான ஒத்துழைப்பை வேண்டுகிறோம். —ஆசிரியர்)

● கடந்த வருடத்தியத் தண்ணீர்ப் பஞ்சத்தின் போது மக்கள் நிலத்தடி நீரைப் பயன்படுத்த அரசாங்கம் தெருவுக்குத்தெரு ஆழ்குழாய்க் கிணறு போட்டது. மக்களுக்கு மீண்டும் குழாய்த் தண்ணீர் கிடைக்கத் துவங்கிய பிறகு எவரும் அக்குழாய்க் கிணறுகளைப் பயன்படுத்துவதாகத்தெரியவில்லை. ஒருசில இடங்களில் இரவோடிரவாக குழாய்க் கிணறுகளின் பாகங்கள் களவாடப்பட்டு வருகின்றன. அரசு இதை கவனிப்பதில்லை. மீண்டும் தண்ணீர்ப் பஞ்சம் வரும்போது மீண்டும் புதிய குழாய்க் கிணறுகள் போடப்படுகின்றன. இதற்குப் பதிலாக அரசு பழையனவற்றை பத்திரமாகப் பாதுகாத்தால் புதியனவற்றிற்குச் செலவிடும் பணத்தைச் சேமித்து வேறு காரியங்களுக்குப் பயன்படுத்தலாமே?
சென்னை—7,
கே.எஸ். கலைமணி.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)

# நேர்முக வர்ணனை

திருமணத்துக்கு முதல் நாள் இரவு மணி 9.30. பூர்ணிமா ஜெயராம் பெற்றோரின் காலில்விழுந்து வணங்குகிறார். அம்மாவும், அப்பாவும் மகளை கட்டித் தழுவி, ஆசி கூறுகிறார்கள்.

பாக்யராஜ் வீட்டில் மணமக்களை அமரச்செய்து, வைதீகச் சடங்குகள் செய்கிறார்கள்.

இரு குடும்பத்தாரும், தனித்தனி கார்களில் திருவேற்காடு போகிறார்கள்.

• • •

பிப். 7-ம் தேதி. காலை மணி ஐந்தரை. திருவேற்காடே திருவிழாக் கோலம் பூண்டிருக்கிறது.

நிறைய போலீஸ் காரர்கள், கூட்டத்தை சமாளிக்கிறார்கள்.

பளபளக்கிற பட்டு வேட்டி, முழுக்கை சில்க் சட்டை, நெற்றியில் திருமண் சகிதம் மாப்பிள்ளை பாக்கியராஜ் வருகிறார்.

மணப்பெண் பூர்ணிமா (ஜெயராம்) வெப்பு நிறப் பட்டுப் புடவை, அரக்கு நிற ரவிக்கை, தங்க நகைகள் ஜொலிக்க வருகிறார். உடன் இரண்டு தோழிகள் (பம்பாயிலிருந்து வந்தவர்களாம்.)

மணப்பெண்ணை, பாக்கியராஜ் பக்கத்தில் கொண்டு வந்து நிறுத்துகிறார்கள்.

எங்கும் ஒரே பரபரப்பு.

மணி சரியாக 6.20. இதோ முதல்வர் எம்.ஜி.ஆர். தம் துணைவியாருடன் வந்து விட்டார். பாக்கியராஜும் பூர்ணிமா (ஜெயராமும்) கைகூப்பி, முதல்வரையும், துணைவியாரையும் வரவேற்கிறார்கள்.

கொஞ்ச நேரமாகிறது. இதோ சிவாஜி, தம் மனைவியுடன் வருகிறார். மணமக்கள் கைகூப்பி வணங்குகிறார்கள்.

கருமாரி அம்மனுக்கு விசேஷ பூஜை முடிந்து, பரிவட்டம் கொண்டு வரப்படுகிறது. எம். ஜி. ஆர். அதை வாங்கி பாக்யராஜ் தலையில் கட்டுகிறார்.

அர்ச்சகர் தீபாராதனை செய்கிறார். கடிகாரம் மணி 6.47 என்று காட்டுகிறது. எம். ஜி. ஆர். திருமாங்கல்யத்தை எடுக்கிறார். பாக்யராஜ் கைகளிலே கொடுக்கிறார். பாக்யராஜ் கைகளை நீட்டி வாங்கிக் கொள்கிறார். பூர்ணிமா (ஜெயராம்) கழுத்திலே முதல் முடிச்சு போடுகிறார். அடுத்து இரண்டாவது மூன்றாவது முடிச்சுக்களையும் போட்டு, மிஸ். பூர்ணிமா ஜெயராமை மிஸஸ். பூர்ணிமா பாக்யராஜ் ஆக்கிக் கொள்கிறார்.

தம்பதிகள் பாக்யராஜின் பாட்டியான மூதாட்டியின் கால்களில் விழுந்து வணங்குகிறார்கள். அடுத்து எம். ஜி. ஆர். கால்களில் விழுந்து வணங்குகிறார்கள். அடுத்து சிவாஜி கால்களில் விழுந்து வணங்குகிறார்கள்.

தொடர்ந்து எம்.ஜி.ஆர். முன் செல்ல, புதுமணத் தம்பதிகள் கோவில் பிரகாரத்தைச் சுற்றுகிறார்கள்.

அலங்காரப் பந்தலில் அமைக்கப்பட்டிருக்கும் மேடையில் மாலை மாற்றிக் கொள்கிறார்கள்.

பாரதிராஜா ஒரு பிரம்மாண்டமான மாலை ஒன்றைக் கொடுக்க, எம்.ஜி.ஆர். தன் திரையுலக வாரிசுக்கு அணிவிக்கிறார்.

அடுத்த ஐந்து நிமிடத்துக்கு எம்.ஜி.ஆரின் வாழ்த்துரை.

தொடர்வது வரிசையாய் பாராட்டுரைகள். திரையுலகப் புள்ளிகள், அமைச்சர்கள், மற்ற வி. ஐ. பிக்கள், ஜெயலலிதா என்று பல தலைகள்.

''எல்லோருக்கும் என்னுடைய மன்னிக்கவும்.... எங்களுடையவணக்கங்கள்'' என்று ஆரம்பித்து பாக்யராஜ் பேசுகிறார்... ''நான் இன்று தான் ''பாக்ய-ராஜ்''' என்று சொல்கையில் அது பலரது ரசிப்பையும் பெறுகிறது. தொடர்ந்து பூர்ணிமா பாக்யராஜ் எழுந்து மைக்கில் ''நன்றி'' என்ற ஒரே வார்த்தையில் முடித்துவிட்டு அமர்கிறார்.

மணி 7.50.

ஒரு மஞ்சள்நிற ஃபியாட் கார் ரெடியாக இருக்கிறது. அது பாரதிராஜாவின் கார்.

மணமக்கள் ஏறி அமர்ந்து கொள்ள, கார் சென்னையை நோக்கி விரைகிறது.

- நமது நிருபர்

புகைப்படம்: சுபா



# சீக்கிரம்! உங்கள் குழந்தையுடைய காயத்தின் சிறந்த பாதுகாப்பிற்கு, உபயோகிப்பீர் பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.

**அவனது திறந்த காயத்தில் சிறிது அழுக்கு இருந்தாலும் கூட தொற்றுப் பரவக் கூடும்.**

தொற்றுக்கு எதிராக, திறந்த காயங்களின் பாதுகாப்பிற்கு உலகெங்கிலும் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.

பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள கிருபணமான ஆன்டி செப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலே, காற்றோட்டமளித்து விரைந்தாற்றும் நுண்துளைகள்; ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.






**பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.**

**தொற்றுக்கு எதிரான மிகவும் நம்பகமான பாதுகாப்பு.**

Johnson & Johnson

# கடிதம், ஒரு தொடர்கதை

மீ.ப. சோமு

இந்த வாரம் புதுமைப்பித்தனுடைய கடிதங்களிலிருந்து சில குறிப்புக்களைப் பார்க்கலாம்.

புத்தகங்களுக்குப் பெயர் சூட்டுவது என்றால், அதற்கு முன்பு புதுமைப்பித்தன் மிகமிக ஆழ்ந்து யோசனை செய்வார். அந்தத் தலைப்பிலேயே மையமான ஒரு கருத்து வாசகர்களின் மனத்தில் ஒரு சித்திரமாகப் படர வேண்டும் என்று விரும்புவார். அதோடு எளிதில் யாரும் சொல்லக் கூடியதாகவும் இருக்க வேண்டும் என்று கருதுவார். அவருடைய இந்த இயல்பை உணர்த்தும் பகுதிகள்:—

''உன்னிடமிருந்து (திருச்சியிலிருந்து) வந்த பிற்பாடு பல சோலிகளில் ஈடுபட்டு, கடிதம் எழுதுவது கூடத் திருநாளைப் போவான் காரியமாக இன்றுதான் கைகூடியது!

நான் எனது நாடகங்களுக்கு (புகழ் பெற்ற ஆங்கில நாடகங்களின் தமிழ்ச் சுருக்கம்) ''உலக அரங்கு'' என்ற பெயர் கொடுக்கலாமா என்று நினைக்கிறேன். அல்லது 'நாடகமாடிய கதைகள்' என்ற பெயர் உனக்குப் பிடித்திருக்கிறதா? உனது கருத்தை எழுது. கதைத் தொகுதிக்கு ''அயல்நாட்டுக் கதைகள்'' என்ற பெயர் நல்லதா அல்லது ''மண் படர்ந்த மாண்பு''? —இது எனக்குக் கூடப் பிடிக்கவில்லை. நீ என்ன நினைக்கிறாய்? பெயர் மூலம் ஒரு உருவகம் அமைய வேண்டும். யோசித்து எழுது.

• • •

தமது புத்தகத் தலைப்புக்களைப் போலவே, நெருங்கிய நண்பர்களின் தலைப்புக்களையும் ஆழ்ந்து சிந்தனை செய்வார். நம்மையும் சிந்திக்க வைப்பார். அதற்கு ஒரு சான்று:

''உன்னுடைய கவிதைகள் ''மதுக் கிண்ணம்'' என்ற பெயரில் அச்சாகி வருகிறது என்று கேள்விப்படுகிறேன். அது நிஜமா? அல்லது நீ முதலில் என்னிடம் சொன்னது போல ''இளவேனில்'' என்றே பெயர் சூட்டினாயா? நான் இந்த மாசக் கடைசிக்குள் உன் கவிதைகளைப் பற்றி ஒரு நீண்ட கட்டுரை எழுதுகிறேன். அது அச்சாகி வெளிவந்ததும் உனது அபிப்பிராயம் தேவை!

• • •

சென்னையிலிருந்து அவருடைய மனைவி வீடான திருவனந்தபுரத்திற்குச் சென்றிருந்த புதுமைப்பித்தன் அங்கிருந்து எழுதுகிறார்:—

''இங்கிருந்து சென்னைக்குத் திரும்பி வரும் வழியில் உன்னை ஒரு நாடகத்துடன் திருச்சியில் சந்திப்பேன்.

உனக்கு நேற்று முன்தினம் அவசரத்தில் ஒரு கார்ட் எழுதி, விலாசம் எழுத மறந்து, இன்று என் கைக்கு வந்து ஒழிபட்டது! இந்தக் கடிதத்திற்கு அந்தக் கதி ஏற்படாது!

எனக்கு ஒரு பெண் குழந்தை பிறந்திருக்கிறது. அதைச் சொல்லத்தான் அவ்வளவு அவசரப்பட்டேன்!

இங்கிருந்து உன்னிடம் வரும்போது உன் கைக்கு (சுளுக்கு) மறவாமல் மருந்து (பிண்டத்தைலம்) வாங்கி வருவேன். உபசாரமாகக் கருதாமல் மருந்தை பிரயோகித்துப் பலனைப் பார். கையுடன் விளையாடாதே. நமக்கு அதுவும் அறிவுந்தான் மூலதனம்.

என் பெண்ணுக்கு ஒரு அழகான பெயர் சொல்லு. நான்சொல்லுகிற பெயர்கள் எல்லாம் ரொம்ப 'சீரியஸ் என்று இங்கே 'ஹோம் டிபார்ட்மெண்ட்' அபிப்பிராயம்! நீ கவிஞன். எனவே சொல்லு. 'பருவத குமாரி' என்பது மிகவும் நீளமாக இருக்கிறது. வீட்டில் செல்லமாக அழைக்க என்ன பெயர் சூட்டலாம்?

• • •

திருச்சி ரேடியோவின் கிராம நிகழ்ச்சிகள் சம்பந்தமாக நான் இரண்டு வாரங்கள் உட்புற கிராமங்களுக்குச் சென்றிருந்தபோது புதுமைப்பித்தன் எழுதிய கடிதத்தில், உரைநடையிலே கேட்பதோடு ஒரு வெண்பாவே எழுதியனுப்பினார்:

''ஏது உன்னிடமிருந்து கடிதமே கிடையாது என்று கேட்பதைவிட, வேலை அதிகமோ என்று கேட்பதில் பொருள் உண்டு.

புத்தகங்களுக்குப் பெயர் சூட்டு...



பெண்ணுக்குப் பெயர் சூட்டு....



அருமைச்சோ மையாஎன்
ஆயாசம், அல்லால்
உரிமை மலேயேறிப்
போச்சோ—மருமத்தைக்
கண்ணுடீண விட்டுக்
கடிதம் எழுதநீ
எண்ணுத காரணத்தைச்
சொல்லு.

● ● ●

ஆங்கிலத்திலிருந்து அவர் தமிழில் தந்த கதைப் புத்தகத்தின் தன்மை பற்றியும், அடுத்த நூல் பற்றியும், எழுதிவிட்டு, எங்கள் இருவருக்கும் நண்பரும் என் உறவினருமான ஓர் கேளிக்கைச் செல்வந்தரைப் பற்றி, புதுமைப் பித்தனுக்கே சொந்தமான அந்த நையாண்டி நடையிலே கேட்கிருர்! நண்பர்களிடம் அவருக்குள்ள மெய்யான பற்றுக்கு இது ஒரு சான்று:—

''எனது 'உலக அரங்கு' உனக்கு எப்படிப் படுகிறது? எனக்கு அது எனது best எனத் தோன்றவில்லே. இதே மாதிரி Greek Plays (கிரேக்க நாடகங்கள்) செய்யலாமா என்று யோசனே. உனது கருத்தை தெரிவி. அதோடு ச...... எப்படி இருக்கிருர்? அந்த மீட்டர் டாக்சியை ஜாலியத் என இன்னும் நினேத்துக் கொண்டிருக்கிருரா? விளையாட்டு முடிந்துவிட்டதா? அதுதான் என் கவலே.

● ● ●

புதுமைப் பித்தனிடம் திட்டம் போட்டபடி நிறைவேற்றுகிற பழக்கம் குறைவு! ''நீ ரேடியோ மாதிரி ஷெட்யூல்காரன்!'' என்று அடிக்கடி என்னேச் சொல்லுவார். கடைசி வாக்கியத்திலுள்ள மன்னிப்பு இதைப்பற்றியே! பெங்களூரிலிருந்து ஒரு நண்பரிடம் கொடுத்தனுப்பிய கடிதம் இது:

''இந்தக் கடிதம் கொண்டு வருகிறவன் எனக்குத் தம்பி முறை. நமது செல்லேயா (தீபன்) வுக்குக் கிளாஸ்மேட். இப்பொழுது பெங்களூரில் சமூக சேவை. உன்னேப் பரிச்சயம் செய்து கொள்வது அவசியம் என்று நான் நினேத்ததிஞல் அனுப்புகிறேன்.

நான் எழுதும் படத்துக்குப் பெயர் ராஜமுக்தி. பிரபாத் கம்பெனியில் படம் பிடிக்கிருர்கள். நாளேக்கு இங்கிருந்து புனு போகிறேன். வந்ததும் வருகிறேன். முன்பு நான் சொன்னபடி வராததற்கு ஆயாசப்படாதே. உன் விசாலமான மனசில் எனது போக்குகளுக்கு மன்னிப்பு உண்டு.

● ● ●

மிகமிக நீண்ட ஒரு கடிதம். 'மணிக்கொடி' இதழின் வரலாறு கூறிவிட்டு, புதிது புதிதாக இந்த கோஷ்டியில் யார், யாரெல்லாம் வந்து ''சீலேப் பேன்'' (அவருடைய வார்த்தை) மாதிரி இதில் ஒட்டிக் கொள்ளப்பார்க்கிருர்கள் எனக் குறிப்பிட்டு எழுதிவிட்டு, அந்த நீளத்தில் லெட்டர்பாடே காலியாகி விடவே, கடிதத்தை எப்படி முடிக்கிருர் என்பதைப் பாருங்கள்:—

''சோமையா இப்பொழுதுதான் நீ என்னே மன்னிக்க வேண்டும். கையிலிருந்த Pad தீர்ந்துவிட்டது. எழுந்து போய்ப் பெட்டியைத் திறந்து புதிது எடுப்பது என்ருல் அது ஒரு மணி நேர வேலே! (நீ கறுப்புக் கண்ணுடியோடு பழகி, வைத்தது வைத்த இடத்தில் இருக்கும்! நான் அப்படியா?) இரவு 12 மணிக்கு எனக்கு அவ்வளவு துணிச்சல் இல்லே. (Pad தேட!) சிவகாமியின் சபதத்தை ஜனங்கள்பொறுமையாக எத்தனே வருஷம் தொடர்ந்து வருகிருர்கள். நீதான் இந்தக் கடிதத்தை மட்டுமாவது தொடர்ந்து வரும்படி காத்துப் பொறுக்கக் கூடாதா? அதாவது மறுபடியும் எழுதும்போது மறக்காமல் விட்ட இடத்திலிருந்து உன்னே விதி மாதிரித் தொடர்ந்து வரப் போதுமான ஞாபக சக்தி எனக்கு இருந்தால் செய்கிறேன் — தொடரும்! எனக்கு மறதியைக்கொடுக்கும்படி நீ உனது இஷ்ட தெய்வத்துக்குப் பிரார்த்தனே செய்!

உனது,
சொ.வி

---

மொஹிந்தர் அமர்நாத் 6 இன்னிங்ஸில் 5 பூஜ்யங்களைப் போட்டு ஒரு பெரும் ரிகார்டை ஏற்படுத்தியிருக்கிருர். இதில் 4 முறை அவர் கிளீன் போல்ட் ஆனுர். இந்த 6 இன்னிங்ஸில் அவர் அடித்த மொத்த ரன்கள் ஒன்றே ஒன்று. அவர் 3 டெஸ்டுகளில் விளையாடி இந்த ஒரு ரன்னே எடுத்திருக்கிருர். ஒரு டெஸ்டுக்கு ரூ.15,000 என்ற கணக்கில், 3 டெஸ்டுகளுக்கு ரூ. 45,000 வாங்கியிருக்கிருர். எனவே ஒரு ரன்னுக்கு ரூ. 45,000. டெஸ்ட் கிரிக்கெட் வரலாற்றிலேயே இதுதான் மிகவும் விலேயுயர்ந்த ரன்.

—பம்பாய் சௌந்தர்.



# நீங்கள் கேட்டவை — தராசு



எளிய மனிதர்



''பனி புரியவில்லை''



''ரீ மேக்''



நேர்மைக்குப் பலன்

**சங்கீதா, சென்னை 5.**

? வாசகர்கள் கருத்து என்பதாகச் சாக்குச் சொல்லி 83 ம் ஆண்டின் மாமனிதராக எம். ஜி. ஆருக்கு அடுத்தபடியாக அன்னை தெரஸாவைக் குறிப்பிட்டுத் தங்கள் பத்திரிகையின் தரத்தைக் குறைத்துக் கொண்டு விட்டீர்களே?

! நம்மில் பலர் தேர்தல் சமயத்தில் வோட்டுப் போடவே போகாமல் வீட்டில் உட்கார்ந்திருப்பார்கள். முடிவு வெளியான பிறகு, 'சே, என்ன ஜனங்கள்: இவரைப் போய்த் தேர்ந்தெடுக்கிறார்களே' என்று குறை சொல்வார்கள். அதைப் போலிருக்கிறது உங்கள் குற்றச்சாட்டும். மேலும் உங்கள் கணிப்பின் அடிப்படையில் ஒரு தவறு உள்ளது. ''சராசரி குடும்பத் தலைவி'' உள்பட பல பேர்களை 83-ஆம் ஆண்டின் மாமனிதர்களாகக் கல்கி வாசகர்கள் தக்கக் காரணங்களைக் குறிப்பிட்டுத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். ''சராசரி குடும்பத்தலைவி''க்கு ஒரே ஒரு வாக்குத்தான் கிடைத்தது என்பதால் அவர் குறைந்து போய் விடவில்லை. எம். ஜி. ஆருக்கு அதிகமான வாக்குகள் கிடைத்ததற்கு அவருடைய பிரா பல்யம் காரணம்.

**ஆர். சிவராஜ், லால்குடி.**

? பாலாஜி படங்கள் எல்லாமே ரீ-மேக்காக இருக்கிறதே?

! ரிஸ்க் எடுக்காமல் செலவிடும் பணத்தை ரீ–மேக் பண்ணும் எளிய வழி அதுதான்.

**குமாரி, மேலப்பாளையூர்.**

? பழனி ஆண்டவன் சிலை சிதைவுக்குக் காரணம் என்ன?

! பக்தர்கள் கொண்டு வரும் பொருள்களையெல்லாம் சிலை மீது அபிஷேகம் செய்து 'பிரசாதமாகத் தருவது என்று இருந்து வந்த பழக்கம்.

**ஆதவன், மதுரை.**

? அமெரிக்காவின் சமீபத்திய விண்வெளி சாதனை பரபரப்பு உண்டாக்கவில்லையே?

! விண்வெளிக்கு மனிதர்களை அனுப்புவதென்பது நமக்குப் பழகி விட்டதால் அவ்வளவு பரபரப்பு ஏற்படுத்தவில்லை. ஆனால் சமீபத்திய பயணத்தின்போது ஒரு வித்தியாசம்; விண்கலத்துடன் எந்தவிதத்திலும் தன்னை இணைத்துக் கொள்ளாமல் வெளியே வந்து விண்வெளியில் விண்கலத்தின் வேகத்திலேயே பயணப்பட்ட ப்ரூஸ், ராபர்ட் ஆகியோரின் சாதனை. இதன் மூலம் இவர்கள் செயற்கைக் கோள்களாகவே மாறிய முதல் மனிதர்களானார்கள். மணிக்கு 17,500 மைல் வேகத்தில் உலகைச் சுற்றி வருவதற்கான ஜெட் விசையை முதுகில் சுமந்து சென்றார்கள். இதற்கு மூன்று நாட்களுக்கு முன்பு தான் மிதக்க விடப்பட்ட வெஸ்டார் என்ற

துணிச்சல்



# மாத்ரே பழ ஜொக்ஜே பற்றி...?

செயற்கைக் கோள் விண்வெளியில் காணாமல் போயிற்று என்பதை நோக்குகையில் இவர்களது துணிச்சல் நம்மைச் சிலிர்க்க வைக்கிறது.

○ ரேணுகா, சென்னை.

? மாத்ரே படுகொலைபற்றி?

! மனிதர்கள் இதைவிடவும் நீசத்தனமாக நடந்து கொள்ள முடியாது என்ற எல்லைக்கே போய்விட்ட அருவருப்பான அதிபயங்கரச் செயல் என்பது ஒருபுறமிருக்க... கண்டனங்கள், அனுதாபங்கள், ராஜதந்திரிகளுக்கு இனிமேல் அளிக்கப்படவிருக்கும் பாதுகாப்பு ஏற்பாடுகள் முதலியன மறுபுறம் இருக்க... மாத்ரேயைக் காப்பாற்றப் புதுதில்லி போதிய அவசர நடவடிக்கை எடுத்துக் கொண்டதா என்றால் இல்லை என்று தலையசைக்கத்தான் வேண்டியிருக்கிறது. 'மாத்ரே, எங்கள் வசம்; நாங்கள் கோருவது இன்னாரது விடுதலையை' என்ற நிபந்தனைச் செய்தி கிடைத்தபோது தில்லியில், பிரதமர் உள்பட முக்கிய மந்திரிகள் யாருமே இல்லை! இப்படியா தலைநகரை அம்போ என்று விட்டுவிட்டுப் போவது? செய்தி கிடைத்ததும் முக்கிய மந்திரி ஒருவர் லண்டனுக்குப் பறந்திருக்க வேண்டாமா? ரேடியோ, ஃபோன், டீ.வி., நாளிதழ் முதலிய சாதனங்களைப் பயன்படுத்தி கடத்தல் பேர்வழிகளுடன் சாதுர்யமாய்ப் பேச்சுவார்த்தை நடத்தி அவகாசம் பெற முயன்றிருக்க வேண்டாமா? முயற்சியின் முடிவு தோல்வியாக இருந்திருந்தாலும்பாதகமில்லை: முயற்சியே இல்லாதது வேதனை.

○ ரகுவீர், கோவை.

? காலஞ்சென்ற வீ.கே.டி. சட்ட மேதை என்பதுதவிர வேறு ஏதேனும் கூறுங்களேன்?

! வழக்குகளில் நியாயத்தின் பக்கம் நிற்பார். நியாயமான காரணம் என்று தெரிந்தால், பணம் பெரிதில்லை அவருக்கு. பாரதத்தின் அரசியல் அமைப்புச் சட்டம் உருவானபோது அல்லாடிக்குத் துணையாகப் பெருமளவில் பணியில் பங்குகொண்ட வீ. கே. திருவேங்கடாச்சாரியின் முக்கிய நற்பண்பு: நேரம் தவறாமை.

○ தி. க. ஸ்ரீராம், சென்னை 28

? லால்பகதூர் சாஸ்திரியின் வாழ்க்கை வரலாறு திரைப்படமாகிறதாமே?

! கோஹினூர் வைரமாக காந்தி படம் இருப்பதால் வேறு வைரங்களே வேண்டாம் என்று கூறி விட முடியுமா? ரங்கூன் வைரமாகிவிடாமல் சாஸ்திரி படத் தயாரிப்பாளர்கள் கவனித்துக்கொண்டால்சரி.



அடுத்த வாரம்:

மாதம் ஒரு மர்ம நாவல்

ராஜேந்திர குமார்

எழுதும்



மர்ம நாவல்

# நின்று பின் தொடர(ர)வும்



அல்சால்:

## தமிழகத்துக்கு வந்த பட்ஜெட் நல்ல பட்ஜெட்?

○ குமார், மேட்டுப்பாளையம்.

? சமீபத்தில் படித்த புத்தகம் பற்றி உங்களை நிறையப் பேர் கேட்பார்கள், ஒரு நல்ல காஸெட் சிபாரிசு செய்யுங்களேன்?

! ஸ்ரீமதி ஜானகி சுப்பிரமணியம் பாடி மியூஸிக் மேக்கர்ஸ் தயாரித்துள்ள நித்திய பாராயண ஸ்துதி, ஷண்மத தேவதா ஸ்துதி வாங்கினால் தினம் அதிகாலையில் வீட்டில் மங்களகர இசை ஒலிப்பதுடன் காஞ்சி காமாட்சி அம்மன் ஆலய தங்க விமானத் திருப்பணிக்கும் உதவியவராவீர்கள்.

○ எஸ்.வி.ராஜசேகர், சென்னை 5.

? அமெரிக்கத் தேர்தல் முடிவு ரேகனைப் பொறுத்தமட்டில் எப்படி இருக்கும்?

! சண்டைக்காரராக விளங்கி உலக ராஜதந்திரிகள் சண்டைப் பிய்த்துக் கொள்ளச் செய்தாலும் அமெரிக்க பொருளாதாரம் அவர் புகுத்திய மாறுதல்களால் முதலில் பலவீனப்பட்டு பின்னர் புதுத் தெம்புடன் துள்ள ஆரம்பித்திருக்கிறது. 'என் பணி முடியவில்லை' என்ற அவர் அறிவிப்பை மக்கள் ஏற்று முடிக்க அனுமதிப்பார்கள் என்பதே என் கணிப்பு.

○ எஸ். வெங்கடேசன், கும்பகோணம். ★

? தமிழகத்தில் அனைத்து மாநிலப் பரிசுச் சீட்டுகளுக்கும் 20 சதம் விற்பனைவரி விதிப்பதால் சாதகபாதகங்கள் என்ன?

! தமிழக அரசுக்கு அதிகப்படி வருவாய் — சாதகம். அரசு அதை சரியானபடி செலவிடப் போகிறதா — கேள்விக்குறி. பரிசுச் சீட்டு விலை உயர்வு காரணமாக விற்பனை குறையப் போவதில்லை — மக்களுக்குப் பாதகம். பிற மாநிலங்களுக்கு இங்கிருந்து போகிற பணம் தொடர்ந்து போய்க் கொண்டே தான் இருக்கப் போகிறது. இந்தப் பிரும்மாண்ட சூதாட்டத்தை அரசே நடத்திக் கொண்டிருக்கையில் கண்காட்சி சாலையில் நடக்கிற சின்னச் சூதாட்டங்கள் கூடாது என்று அமைச்சர் தடை விதிக்க, வழக்கு நீதி மன்றம் போக நேர்ந்தது — நகைச்சுவை.

○ கே. மோகன்ராஜ், கோலார் தங்க வயல்.

? கருணாநிதியை எதிர்த்து ஜெயலலிதா போட்டியிட்டால் வெற்றி யாருக்கு?

! ஜனநாயகத்துக்கு.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
என். வேங்கடேசன்,
30, காமாட்சிஜோஸியர்தெரு,
கும்பகோணம் 612 001.





# பம்பாய் ஸ்பெஷல்

- பம்பாய்க்குப் போனால் வி. டி. (விக்டோரியா டெர்மினல்) யில் இறங்குவதா, தாதரில் இறங்குவதா என்று கேட்க முடியாது இன்னும் கொஞ்ச நாளில். காரணம் வி.டி. என்பதை ஐ. டி. (இந்திரா காந்தியைக் குறிக்கிறது ஐ) என மாற்ற ஏற்பாடு நடந்து வருகிறதாம்.

- பெருமைக்குரிய விஷயம்: பம்பாய் வாழ் தமிழர்கள் 'திருக்குறள் பேரவை' என்ற அமைப்பை ஏற்படுத்தித் தமிழ்ச் சேவை புரிவது.

வருத்தத்துக்குரிய விஷயம்: பம்பாயில் வாழுகிற தமிழ்ப் பெண்ணிடம் 'வாய்மை' என்றால் என்ன என்று கேட்டபோது கிடைத்த பதில்: 'இது தெரியாதா? லிப்ஸ்டிக் (வாய்—மை!).

- பம்பாய் ராஷ்ட்டிரிய கெமிகல்ஸ் நிறுவனத்தினர் மௌலியின் 'புல்லாங்குழல் அடுப்பு ஊதுகிறது' நாடகத்துக்கான அழைப்பிதழை வந்தவர்களுக்கெல்லாம் தந்து, வீட்டில் எல்லோரையும் அழைத்துக் கொண்டு, வரச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ''என்ன, புல்லாங்குழல் இலவசமாக அடுப்பு ஊதுகிறதா?'' என்று நகைச்சுவையாய்க் கேட்டார், பக்கத்திலிருந்த நண்பர்.

- ஒரு திருமண வீட்டில் முகூர்த்தம் முடிந்து ஊஞ்சல் நிகழ்ச்சி. ஊஞ்சல் மாட்ட சங்கிலி எடுத்து வர நேரமாயிற்று. ''சனியன்! சங்கிலி கொண்டு வர எத்தனை நேரம்'' என்றார் ஒருவர். ஊஞ்சல் பலகையைக் கொண்டு வந்து கொண்டிருந்தவர்கள் ''சே! பிணகனம் கனக்குதே'' என்றார்கள். இன்னொருவர்: ''ஒரு வேலை சொன்னா எத்தனை நேரம்? உங்களோட ஒரே 'இழவாப்' போச்சே?'' என்றார். ''ஊஞ்சல் முடியறதுக்குள்ள 'தாலி அறுந்துடும்' போங்க'' என்றார் இன்னொருவர். —இப்படியாக நம்மில் பலர் சமயத்தில் என்ன பேசுகிறோம் என்று தெரியாமலேயே பேசி விடுவதுண்டு.

இது பம்பாய் தமிழ்ச் சங்கத்தில் கேட்ட குட்டிக் கதை.

- ஔவையார் முதலில் ஆத்திச்சூடி (109 வரிகள்) எழுதினார். அடுத்து பாரதியின் புதிய ஆத்திச்சூடி (110 வரிகள்) அடுத்து பாரதிதாசன் (84 வரிகள்) பின்வாணிதாசன் (95) கவிஞர் சுத்தானந்தபாரதி (110) கு. ப. மாணிக்கம் (110), டாக்டர் சஞ்சீவி (108), இப்படியாக நீள்கிற லிஸ்டில் கடைசியாக சேரப் போகிறவர் பாரதி காவலர் கே. ராமமூர்த்தியாம்.

- முன்பு பம்பாயிலிருந்து வந்து கொண்டிருந்த பத்திரிகை 'விந்தியா.' இப்போதுள்ள ஒரே ஒரு தமிழ் தினசரி ''மராட்டிய முரசு''. நின்று போய் விட்ட வார இதழான 'பம்பாய்' மாதமிரு முறையாய் மீண்டும் வர ஆரம்பித்திருக்கிறது. (ஒரு சந்தேகம் — ஆனால் இப்போதும் தலைப்பில் பம்பாய் — வார இதழ் என்று போட்டிருக்கிறதே?)

- மற்றவர்களை முந்திக் கொண்டு, சுப்பிரமணிய சிவா நூற்றாண்டு விழாவை சிறப்பாய்க் கொண்டாடியது பம்பாய் தமிழ்ச் சங்கம்.



ஒரு மெட்ராஸ் கொசுறு:

- 'தலைப்புச் செய்தி' வாசிக்கவிருக்கிறார் டெல்லி கணேஷ். ஆம்! அவரது தலைப்புச் செய்தி அரங்கேற்றம் மார்ச்சில். (எழுதினது ரமணி). நண்பர்கள் யாரைப் பார்த்தாலும் உடனே ஒன்றிரண்டு நாடக ஸ்டிக்கர்களைத் தருகிறார், டெல்லி கணேஷ். இந்த நாடகத்தின் ஸ்பெஷாலிட்டி?

முதன் முறையாக மேடையில் இரட்டை வேடம். ஒன்று நாணயமான பத்திரிகை நிருபர். இன்னொன்று துப்பறியும் நிபுணர். விறுவிறுப்பான கதையாம்.

**- சின்ன கொலம்பஸ்**

# நிறங்கள் நிழலில் இல்லை...

இந்திரா செளந்தர்ராஜன்

கணேசனைப் பார்க்கவே என்னவோ போல் இருந்தான்.

பத்து நாள் உரோமம் கன்னத்தையே கறுப்பாக்கி முகத்தில் முக்கால் பரப்பை மூடியிருந்தது! பார்வையில் வெளிச்சமே யில்லை. கிராமத் தெருவிளக்கு மாதிரி மங்கி மட்டமாகத் தென்பட்டவனை தேவ சகாயம் ஒரு மாதிரியாகப் பார்த்தார். பின் பேசினார்.

''ரொம்ப ஏழைப்பட்ட பையன்கறதுனால தான் உங்கிட்ட என் ரேட்டுல நான் பாதியை மட்டும் கேட்கறேன். ஐயாயிரங் கறது இப்பல்லாம் ஒரு தொகையே இடை யாது. சிலருக்கு அது அஞ்சு நாள் பாக்கெட் மணி. அதுகூட உன்னால முடியலேன்னு சரிப்பட்டு வராது. பத்தாயிரத்துக்கு இந்த வேலைக்கு ஆள் ரெடியா இருக்கு! என்ன சொல்றே?''

—கணேசன் கலக்கத்தோடு நிமிர்ந்து பார்த்தான்.



''ஐயாயிரம் இருந்தா உங்ககிட்ட நான் இப்படி கெஞ்சவேணு சார்? தயவு பண்ணுங்க சார். நாங்க ரொம்ப ஏழைப்பட்டவங்க...''

—கேவலோடு பேசினான்.

''சாரிப்பா... என்னால முடிஞ்சது இவ்வளவுதான். இதுக்கும் மேலே போக முடியாது. நீ கிளம்பு...''

''கொஞ்சம் கூடானார் தேவசகாயம்.

''சரி, சார், ட்ரை பண்றேன்...''

சஞ்சீவி சகுந்தலாவைப் பார்த்தார். சகுந்தலா கழுத்தைப் பார்த்தாள். இரண்டு பவுனில் தங்கம் சிரித்தது. அடகில் அது ஆயிரத்து ஐநூறாகத்தான் மாறியது!

சொச்சம் மூவாயிரத்து ஐநூறு?

''என் சினேகிதன் ஒருத்தன்கிட்ட கேட்டுப் பார்க்கறேன்...''

—சஞ்சீவியின் புறப்பாடு கணேசனுக்குள் தென்றலானது.

''என்னமோப்பா... படிக்கவைக்கத்தான் படாதபாடு பட்டோம்னா. இப்ப வேலைக்கு சேர்க்க உயிரையே கூடக் கொடுக்க வேண்டி வரும் போல இருக்கு...''

—தாய்க்காரி சகுந்தலாவின் சலிப்பில் இந்தியாவே தெரிந்தது.

''அம்மா நான் போய் மாமன்கிட்ட மோதிப் பார்க்கறேன்'' — கணேசன் தன் பங்கு முயற்சிக்கு கால் எடுத்த போது சகுந்தலாவின் முகம் மழைவானமானது.

''ஏம்மா மாமா செய்ய மாட்டாரா?''

''செய்வாருப்பா... அவர் பொண்ணு ரோகிணியை நீ கட்டிக்கறதா இருந்தா!''

''ஐய... அந்தக் கருப்பியையா? ஆறுங்கிளாஸ் கூடத் தேறாத பொண்ணைப் போயி ஒரு கிராஜுவேட்டுக்குச் சம்பந்தப் படுத்திப் பேசறியே...'' — லேசாகக் கத்தினான்.

''பெரிய கிராஜுவேட்... நிறத்துல என்னடா இருக்கு? நிக்க நிலத்தைக் காணோம்... பறக்க விமானம் கேக்குறியே.....''

''நீ என்ன சொன்னாலும் எனக்குப் மேவாதும்மா. வேலைக்குப் போற பெண்ணைத்தான் நான் கட்டுவேன். பொண்ணு செவப்பா லட்சணமா இருக்கணும்...''

—கனக்கனவாகப் பேசினவனை சகுந்தலா ஒரு தினுசாகப் பார்த்தாள்.

''அப்போ மாமனைப் பார்க்கிறதிலே அர்த்தமில்லே!''

''மாமனைப் போய்ப் பார்க்கறது தெண்டம்கறே. ஒரு சமயத்துல உதவாத சொந்தம் என்ன சொந்தம்மா? பொண்ணைக் கட்டுனாத்தான் தருவேன்னு அதுக்கு இவர் எதுக்கு? நாட்டுல எவ்வளவோ பேர் நொண்டி முடம்னு பெத்து வெச்சுட்டு தயாரா இருக்காங்க... அவங்ககிட்ட போய்க்கிறேன்..'

''அவரும் இதே பாவனையிலதான் பேசறாரு! சொந்தத்துல மாப்பிள்ளை இருக்கச்சே என்னை வெளிய அலையும்படி பண்ணா அது என்ன சொந்தம்னு சொல்லிப் புலம்பறார்டா...''

''அதுசரி பெத்துருக்கறது ரதியாஇருந்தா ஒரு பிரச்சினை இல்லே. இதுதான் கரிக்கட்டையாச்சே...''

—சகுந்தலாவால் அவன் குத்தலைச் சகிக்க முடியவில்லை.

''நீ கூட அதிர்ஷ்டக்கட்டைத்தாண்டா! அதனால தான் ஒரு புண்ணாக்கு வியாபாரிக்கு மகனாப் பொறந்து அல்லாடறே. அத மனசுல வெச்சுக்கோ...''

—பேசிவிட்டுப் போய்விட்டாள். கணேசன் ஒடிந்து போய்ப் பக்கத்துச் சேரில் விழுந்தான். பாக்கெட்டைத் தடவினான். பத்து பைசா இருந்தது. 'ஒரு டீக்குக்கூட நாற்பது காசு வேணுமே?''

சலிப்பில் அவன் சமுத்திரமான சமயம், சஞ்சீவி உள்ளே நுழைந்தார். முகத்தின் இறுக்கமே தோல்வியைப் பறை சாற்றியது.

''ஐயாயிரம் லஞ்சம் கொடுத்து உத்தியோகம் பார்க்கறதுக்கு அஞ்சு எருமையை வெச்சுப் பால் கறந்து பொழைக்கலாம்னு உபதேசம் பண்ணியிருக்கான் என் சினேகிதன்...''

''ஆமாமா... அதுக்குத்தான் பி.ஏ. படிச்சிருக்கேன் பாரு...'' —பலமாக முனகினான். சஞ்சீவி அடிபட்டவர் மாதிரி நிமிர்ந்தார்.

''அதிகம் படிக்கறது வேலைக்காக இல்ல. அறிவு வளர்ச்சிக்காக. அறிவு வளர்ந்தாத்தான் வாழ்க்கையில அடங்கியிருக்கற நிஜமான உண்மை கண்ணுக்குத் தெரியும். எந்த வேலையும் கேவலமில்லே, எதைக் கொண்டும் நேர்மையா, கடுமையா, பாடுபட்டால் உச்சிக்குப் போகலாம்கிறது புரியும். இங்க எல்லாம் தலைகீழா இருக்கு. நீங்க என்னத்தைப் படிக்கறீங்களோ?''

—சஞ்சீவி உபதேசியாகிவிட்டார். சகுந்தலா அதை நிமிண்டிக்கொண்டு வந்தாள்.

''போன காரியம் தோல்வின்னு பொக்குன்னு முடிக்கக்காம பிரசங்கம் பண்றீங்களே... இனிமேத்தானா இதையெல்லாம் கேட்டு அவன் உங்களோட உட்கார்ந்து புண்ணாக்கு விக்கப் போறான்?''

---

மேலட்டையில்:
**குமாரி பாக்கியலக்ஷ்மி சிவராமன்**

வண்ணப்படம்:
**சரஸ்வதி சத்தியமூர்த்தி**



—கணேசனுக்கு இருவரையும் பார்க்க எரியும் திவட்டிதான் தெரிந்தது. வெறுப்போடு வெளியே நடந்தான். பல மணி நேரம் கழித்துத் திரும்பினவனிடம் கொஞ்சம் உற்சாகம்.

சகுந்தலா அதை இனங்கண்டு கொண்டாள்.

''என்னடா கலங்கலா இருந்தே... தெளிவா இருக்கே?''

''அம்மா நான் ரோகிணியைக் கட்டிக்கிறேன்!'' — பட்டென்று பதில் வந்தது கணேசனிடம்.

''கோட்டயத்துல இடி இடிச்சு, உள்ளூர் கோபுரத்துல மழை பெய்ஞ்ச கதையால்ல இருக்கு... அவ கரிக்கட்டை யாச்சேடா?''

''பரவால்ல... அட்ஜஸ்ட் பண்ணிக்கிறேன். மொத்த பணத்தை வாங்கித் தள்ளு...''

''தம்பி கல்யாணங்கறது பிரியத்துல நடக்கற பெரிய விஷயம். ஆயிரங்காலத்துப் பயிரு. ஐயாயிரத்துக்காக நடக்கற விஷயமில்லேப்பா...'' — ஆதங்கத்தோடு பேசினாள் சகுந்தலா.

''எல்லாம் தெரியும்மா... நீயே வர்றதை கெடுத்துப்பிடுவே போல இருக்கே. நான் சொன்னதைச் செய்மா...'' — சூடானான் கணேசன்.

கல்யாணம் முடிந்து விட்டது.

''எத்தனை நாள்டா ஆபீசுக்கு லீவு போட்டிருக்கே...?'' — நண்பன் ஒருவன் எகத்தாளமாகக் கேட்டான்.

''ஒரு வாரம்!''

''அனுபவி ராஜா அனுபவி!''

ராத்திரி உற்சாகம் கணேசனிடம் துளியும் இல்லே. ரோகிணியைப் பார்க்கவே அவனுக்கு என்னவோ போல இருந்தது. ஏனோ அவளது உருவும், பெயரும் அவனை நெருடிக் கொண்டே இருந்தன.

பூ மெத்தையில் பரிவோடு வந்து பக்கமாக அமர்ந்தும் கூட இவன் சட்டை செய்யவில்லே! கனத்த மௌனம் பல மணி நேரங்களைத் தின்றது. ரோகிணிக்குப்பாரம் நெஞ்சை அமுக்கியது. இலை மறை காயாக அவன் பணத்துக்காகக் கல்யாணத்துக்குச் சம்மதித்ததை அறிந்திருந்தாள்.

இப்பொழுது அதை நிஜப்படுத்திக்கொண்டிருக்கும் இவனிடம் தான் என்னத்தைச் செய்ய...?

அந்த ராத்திரி அப்படியே முடிந்தது!

ஒரு வாரம் ஓடிவிட்டது.

ரோகிணி ஒரு முடிவிற்கு வந்துவிட்டிருந்தாள். அன்றைய இரவில் அவனிடம் பேசினாள்.

''என்னைப் பிடிக்கலேன்னு ஏன் கட்டிக்கிட்டீங்க? பணத்துக்காகவா?'' — அவள் தொடுத்த நேரெதிர் கணையின் நிஜத்தில் அவன் கொஞ்சம் நிலைகுலைந்தான்... அவனது மௌனம் நீண்டது.

''கல்யாணம் பண்ணிக்காமலே கேட்டிருந்தாலும் நான் எப்படியாவது அப்பாகிட்டே கேட்டு வாங்கித் தந்திருப்பேன். என் கழுத்துல தாலியக் கட்டி ஏன் இப்படி சித்திரவதை பண்றீங்க?''



எழுத்தாளரின் மகன் இன்னொரு எழுத்தாளரிடம்: எங்கப்பா செலவிற்குப் பணம் இல்லாததால் ஒரு கதை இருந்தா கைமாற்று வாங்கிட்டு வரச் சொன்னாரு. அடுத்த மாதம் திருப்பித் தந்துடுறாராம். —ஆர். ஜெயலட்சுமி.

—அவனது குற்றம் நாவை இறுக்கியது. அவனால் பதிலளிக்க முடியவில்லே.

''நீங்க எப்படியும் முன்னுக்கு வர என்னை எதுக்கு பலி கொடுக்கறீங்க? நான் செஞ்ச பாவமென்ன?''

—கண்ணீரில் அவள் கரைத்த வினா அவனைக் குத்தியது. கொஞ்சம் கோபத்தோடு நிமிர்ந்தான்.

''இப்ப என்ன ஆய்ப் போச்சுன்னு இப்படிப் புலம்பறே. உன்னைத் தொட்டுப் பழகினாத்தான் நான் புருஷனு? நீ இருக்கற அழகுக்கு அப்படியெல்லாம் வேற எதிர்பார்ப்பு உனக்கு இருக்கா? எனக்கு இஷ்டமில்லேன்னு விட்டுடணும். கட்டிக்க சேலே, வேளைக்கு சோறு இல்லேன்னு பேசு... மத்ததுல தலையிடாதே...''

—பேசிவிட்டு வேகமாக வெளியேறியவனை பொறுமலோடு பார்த்துச் சோர்ந்தாள் ரோகிணி.

ஆபீசில் ஒரே பரபரப்பு!

மேனேஜிங் டைரக்டரின் குளிர்பதனக் கண்ணாடி அறைக்குள் தேவசகாயம் இரண்டு போலீசாருக்கு இடையே மேனேஜிங் டைரக்டர் எதிரே வதங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது.

கணேசன் தன் சீட்டுக்குப் போன நொடியில் பியூன் வந்து அழைத்தான்.

''சார், எம். டி. வந்திருக்கார். உங்க பேர்ல என்கொயரி புக் ஆகியிருக்கு. வரச் சொன்னாங்க.''

—கணேசனின் கைகள் தந்தியடித்தன. பக்கத்து டேபிள் ஹெட் கிளார்க் ஒருமாதிரியாகப் பார்த்தார்.

என்ன நடந்தது?

எதற்கு என்கொயரி? — விடை விரைவிலேயே கிடைத்தது.

''மிஸ்டர் கணேசன், உங்க அப்பாய்ண்ட்மெண்ட்டுக்காக நீங்க மிஸ்டர் தேவசகாயத்துக்கு அஞ்சாயிரம் தந்தீங்களா?''

—கணேசன் பயந்த மௌனத்தில் அந்தக் கேள்வியை அங்கீகரித்தான்.

''ஓ. கே... நீங்க போகலாம்...''

—வெளியே வந்தான். டேபிளுக்கு டேபிள் ஒரே கசாமுசா.

''பல நாள் திருடன் ஒருநாள் அகப்படு வான்கறது சரியாப் போச்சு. இப்ப இந்த தேவசகாயம், தான் மாட்டப்போய்த் தனக்கு லஞ்சம் கொடுத்த அத்தனைப் பேரையுமில்ல மாட்ட வெச்சுட்டான்!'' ஒருவர்.

''வாங்கினவனை விட, கொடுத்தவனுக்குத் தண்டனை அதிகம்...''

—இன்னொருவர். அடுத்த சில மணியில்எல்லாம் முடிந்து விட்டது! கணேசன் பெயரில் ஒரு கேஸைப் பதிந்து கொண்டு வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள். பெற்றவர்கள் முகத்தில் முழிக்கவே அவனுக்கு என்னவோபோல் இருந்தது. அனைத்திற்கும் மேலாகத் தேவசகாயத்தை நினைத்து மனதும் குமுறியது.

''சண்டாளப் பாவி என்னை இப்படிப் பண்ணிப்பிட்டியே...'' பொறுமையை மீறி மார்பை வலித்தது. இது தான் சந்தர்ப்பம் என்று சகுந்தலா வாயைத் திறந்தாள்.

''உன் ஆசை வேலை ஒரு வழியாப் போயாச்சு! ஐந்தாயிரமும் போயாச்சு. பத்தாதத்துக்கு ஒரு கேஸ் வேறே. இதுக்கு எத்தனை வருஷ தண்டனையோ, இல்லை அபராதமோ... எல்லாம் எதனால தம்பி?''.

—கணேசன் கலக்கத்தோடு பெற்றவளைப் பார்த்தான்.

''விரலுக்கு மீறி வீங்கணும்னு நினைச்சா வெடிச்சுடும்கறது புரியுதா? இப்படி அம்போன்னு வந்து நிக்கறதை விடவா மாடு மேய்க்கறதும், செருப்பு தெய்க்கறதும், புண்ணாக்கு விக்கறதும் கேவலம்?''

''அம்மா புரியாமப் பேசாதே... இப்படி நடக்கும்னு எனக்குத் தெரியுமா? என் பொல்லாத நேரம் அந்த தேவசகாயம் துரோகம் பண்ணிட்டான். அவன் தப்புக்கு நான் என்ன பண்ணுவேன்...''

''நீ மட்டும் உன் பெண்டாட்டிக்குத் துரோகம் பண்ணலாமோ? அவ என்னடா தப்புப் பண்ணா?''

—தலைமேல் சம்மட்டி விழுந்த மாதிரி இருந்தது கணேசனுக்கு.

''காசுக்காக, உன் நலத்துக்காக ஒருத்தியைக் கண்கலங்க வெச்சே... அதே காசு இப்ப உன்னை நடுத்தெருவுல நிறுத்திடிச்சு.''

—சகுந்தலா பொறுமிவிட்டு அகன்றாள்.

பனித்த விழிகளோடு அமர்ந்தவனின் சிரத்தை ஒரு கரம் மெல்ல வருடியது. திமிர்ந்து பார்த்தான். நீர் விழிகளோடு ரோகிணி தென்பட்டாள்.

''கவலைப்படாதீங்க. எல்லாம் சரியாயிடும். இந்த நகைங்களை வித்து ஏதாவது வியாபாரம் பண்ணுங்க. மனது தளராதீங்க...''

—அவன் நகைகளோடு நீண்ட அவளது கைகளை அப்படியே பிடித்து இழுத்து கண்களில் ஒற்றிக் கொண்டான். தொலைவில் மௌனமாகவே இருந்து கொண்டு மருகிக் கொண்டிருக்க சஞ்சீவ் முதல் தடவையாக கணேசனை நம்பிக்கையோடு பார்த்தார்.

நிழலாக உர்ந்து நிற்பவளிடம் நிறம் பார்த்த கொடுமைக்காக அவனது பிராயச் சித்தத்தில் அவன் நெகிழ்ந்து கொண்டிருந்தான்.



# பொங்கல் கவியரங்கம்



(விளையாட்டு) – **தங்கமடி தங்கம்**

கண்ணாமூச்சி ரேரே கழுதைமூச்சி ரேரே
சொன்னாக் கேளு ரேரே பித்தனைத்தங்கம் ரேரே

கொடுமைக்கார மாமியாம், சாதுப்பெண்ணை ரேரே
கடுமைசாட்டை காட்டியே கண்டிப்பாராம் ரேரே
மிடுக்காய் இன்னொரு பெண்ணிடம் மாட்டிப்பாராம் ரேரே
வாணிராணியின் வாரிசாய் தங்கம் மல்லிகா ரேரே

அச்சாய்க் கதையை மறுபடி அடுப்பில் போட்டார் ரேரே
பச்சை வசனம் எழுதியே சிரிக்கச் சொன்னார் ரேரே

சின்ன டிரஸ்ஸில் அநுராதா தவக்களை நாட்டியம் ரேரே
துள்ளும் குரங்குடன் ஹாஸ்மோகன் எல்லாம் உண்டு ரேரே

ரெட்டை வேடம் அம்பிகா மட்டும் ஜோரு ரேரே
ரெண்டுங் கெட்டான் சேகரோ ரோதனை பாரு ரேரே

பார்க்கிற நேரம் என்னவோ பாய்ந்தோடுது ரேரே
இழுக்கும் ரப்பரும் இருப்பதனால் இனிக்கவில்லை ரேரே

கண்ணாமூச்சி ரேரே கழுதைமூச்சி ரேரே
சொன்னாக் கேளு ரேரே பித்தனைத் தங்கம் ரேரே

(வாழ்த்துப்பா) – **ஆவா ஆவா வாத்துக்கள்**



**வா**ழ்த்துப்பா பாடித்தான் கவிஞர்கள்
வாடாத பாமாலை கோர்த்திடுவார் – மாறுதலாய்
'வாத்துப்பா' பாடி இந்த கவியரங்கம்
வந்திடட்டும் நிறைவுக்கு எனத் துணிந்தேன்.

கிராமத்து வானத்தில் ஒரு பெண் பறவை
கலப்பில்லா அசட்டுத்தனம் அதன் உரிமை
அண்டிச் சேர்ந்த தொரு ஆண் பறவை
அதற்கும் அப்பாவித் தனம் தனி உடைமை

சிவகுமாரே, கலக்ஷனாவே, என்றென்றும் சிரித்து வாழ்க!
குளியல் உடை இளவரசி, குடை பிடிக்கப் பாண்டியனும்
முகம் சிவந்த வில்லனும், மூக்கு சிவந்த அஸிஸ்டெண்டும்,
தமிழ்ப் படத்தின் பிரதிநிதியாய் ஒரு கொத்துப் பாத்திரங்கள்.

தேங்காயே, ஜனகராஜே, பல்லாண்டு நகைத்து வாழ்க!
அடுக்கடுக்காய் சுவைசேர்க்க அருமையான கற்பனைகள்,,
இந்தநாளின் திரைப்படங்கள், இவற்றில் உள்ள ஓட்டைகள் என
கந்தல் கிழிசல் குப்பைகளைக் கருத்தில் கொண்ட சம்பவங்கள்
போதும் என்கிறார் டைரக்டர், புதிதாய்த் தமிழில் படம் பண்ண.

மணிவண்ணன், பஞ்சு சாரே, மகிழ்வோடு நீங்கள் வாழ்க!
வேண்டாத பாடலுடன் உப்பில்லா வசனத்துடன்
ஒன்றிரண்டு நேரத்தில் உறுத்தலான டைரக்ஷன்.
மற்றபடி,
ரசிக்கலாம் வசனங்களை, இசைச்சுவையை, கலர்த்திரையை
சிரிக்கலாம் – மானம் விட்டு அல்ல, மனம் விட்டு!
இளையராஜா, சபாபதியே, இனிதாக நீங்கள் வாழ்க!

(மைக்கில் ஒரு அறிவிப்பு: 'இத்துடன் கவியரங்கம் முடிந்தது: அவரவர்கள் சொந்த செலவில் சுண்டல் வாங்கிக் கொண்டு கலையலாம்'.)

கவிதை எழுதுகிறவர்கள், எழுதப் போகிறவர்கள், படம் எடுத்தவர்கள், எடுக்கப் போகிறவர்கள் எல்லோரிடமும் மறுபடி மன்னிப்பு கேட்டுக் கொண்டு,

வந்தனங்களுடன்,

**ஜெயமன்மதன்**

# லோகோற்பவம்

மௌனம் பூண்ட வெட்டவெளி ஒலியுமிழ்ந்ததே — அந்த
ஒலியை விண்மீன் கண்சிமிட்டிக் கேட்டு நின்றதே;
கேட்டு நின்ற பரவசத்தில் காற்று வந்ததே — இன்பத்
தென்ற லெனும் அலையெழுந்து துதித்து நின்றதே!

அண்டமென்ற முட்டைகண்டு
ஆதியென்ற சேவலொன்று
அகிலமெங்கும் பறந்துசென்று
ஆர்த்துவந்ததே — வானம்
பார்த்து நின்றதே!

மோனங்கொண்ட வான்வெளியில் வில்லெழுந்ததே — அந்த
வில்லினிலே வர்ணஜாலம் கோலமிட்டதே!
கோலங்கொண்ட மோனசக்தி கருவுயிர்த்ததே — இன்பக்
கண்ணீரென்ற கனகமழை கடலடைத்ததே!

அண்டமென்ற முட்டைகண்டு
ஆதியென்ற சேவலொன்று
அகிலமெங்கும் பறந்துசென்று
ஆர்த்துவந்ததே — வானம்
பார்த்துநின்றதே!

மின்னலிட்ட வான்திரையில் ஒளிதெறித்ததே — அந்த
ஒளியினிலே சிவந்தமுகம் சிரித்தெழுந்ததே!
சிரித்தெழுந்த சூரியனின் கதிர் விரிந்ததே — அந்தக்
கதிரினிலே ககனவுயிரும் தோன்றி வந்ததே!

அண்டமென்ற மொட்டவிழ
ஆதியென்ற சேவல்கண்டு
அகிலமெங்கும் இதழ்விரிய
ஆர்த்துவந்ததே — கைகள்
கூப்பிநின்றதே!

பி. கீதா.
பிளஸ்–டூ மாணவி,
ஏ. ஆ. வி. பெண்கள் உயர்நிலைப் பள்ளி, சென்னை–1.







படம்: என். தெ.., மூன்றாவது செமஸ்டர், எலக்ட்ரானிக்ஸ், சென்ட்ரல் பாலிடெக்னிக், சென்னை-20

## வியப்பளிக்கும் விலங்குகள்

- பிறக்கும்போது ஒரே ஒரு பவுண்டு எடையுள்ள கரடிக்குட்டி ஒரு வயதை அடையும் போது 100 பவுண்டு எடை பெற்று விடுகிறது. இதன் வாழ்வுக்காலம், 30 வருடம்.
- யானையின் துதிக்கையில் எலும்பே கிடையாது. முழுவதும் தசையால் ஆனது. அது துதிக்கை நுனியில் உள்ள கூர்மையான பகுதியைக் கொண்டு கீழே விழும் ஊசியைக் கூட எடுத்துவிடும். யானையால் 100 ஆண்டுகள் வாழ முடியும்.
- ஒட்டகத்தின் முதுகு பார்ப்பதற்கு வளைவு போல் தோன்றினாலும் அதனுடைய முதுகெலும்பு நேராகத்தான் உள்ளது. சதைதான் வளைவாக உள்ளது. நாலுகால் விலங்குகளில் ஒட்டகத்திற்கு மட்டும் நீந்தத் தெரியாது. உப்பு நீர் குடிப்பதில் ஒட்டகத்திற்கு மிக விருப்பம்.
- தனக்குப் பின்புறம் உள்ள பொருள்களைக் கழுத்தைத் திருப்பாமல் பார்க்கும் ஆற்றல் ஒட்டகச் சிவிங்கிக்கு உண்டு.
- ஒரு குட்டித் திமிங்கலம் ஒரே ஆண்டில் தன் தாயின் வடிவத்திற்கு இணையாக வளரும். இதன் வாழ்வுக் காலம் 500 ஆண்டுகள்.
- பொதுவாக விலங்குகள் வாயைத் திறந்தால் கீழ்த் தாடைதான் கீழ் நோக்கி அசையும். ஆனால் முதலை தன் வாயைத் திறந்தால் மேல் தாடைதான் மேல்நோக்கி அசையும். மேலும் முதலை கண்களைத் திறந்து கொண்டே தூங்கும்.
- ராகூன் என்னும் விலங்கு தான் சாப்பிடும் உணவைத் தண்ணீரில் கழுவிச் சுத்தம் செய்த பின்னர்தான் சாப்பிடும்!
- ஜாவாவில் உள்ள ஒருவகைத் தவளை பறக்கும் ஆற்றலைப் பெற்றது. அதன் கால்கள் பறக்கும் காலத்தில் இறக்கை போல் பயன்படுகின்றன.
- ஈ ஒரு நாளைக்கு 6.5 மைல்கள் வரை பறந்து போகும்.
- அயர்லாந்து, ஐஸ்லாந்து, நியூஜிலாந்து ஆகிய நாடுகளில் பாம்பே கிடையாது!
- நண்டுக்கு அதன் வயிற்றில் தான் பற்கள்!
- பூச்சி இனங்களில் தட்டாம்பூச்சி ஒன்று மட்டுமே ஒரே இடத்தில் நின்று பறக்கும் ஆற்றல் பெற்றது.
- எல்லா மிருகங்களையும்விட அறிவு மிக்கது எறும்புதான்.
- நாய்க்கு வர்ண பேதம் தெரியாது. கறுப்பு, வெள்ளை ஆகிய இரண்டு நிறம் தான் அதற்குத் தெரியும்.
- வெட்டுக்கிளிக்கு காதுகள் அதன் கால்களில் உள்ளன. தலையில் கிடையாது.
- கரப்பான் பூச்சி எப்போதுமே சரியாகப் பதினாறு முட்டைகளை இடும்.
- சுவர்க்கோழி வாயால் சத்தம் இடுவதில்லை. தனது பின்னங்கால்களை உரசுவதன் மூலம் 'கிரீச்' என்ற சப்தத்தை எழுப்பும்.

தொகுப்பு: கே. ஆர். மனோகர்,
பி. எஸ்ஸி. மூன்றாம் ஆண்டு,
விலங்கியல் துறை,
மன்னர் சரபோஜி அரசினர் கல்லூரி,
தஞ்சாவூர்–613 005.

**மாணவர் பக்கம்**

## இவரைப் பற்றி:

**ரஞ்சி டிராஃபி கிரிக்கெட் சுறுசுறுப்பு அடைந்திருக்கிறது. ரஞ்சி பற்றித் தெரிந்து கொள்வோமே.**



நவநகர் அரசர் மஹாராஜா ராஜ கர்னல் ரஞ்சித்சிங்ஜி விபாஜி முப்பெரும் தகுதிகள் பெற்றவர். முதன்மையாக அபாரமான கிரிக்கெட் வீரர். ஒரு முறை கேம்ப்ரிட்ஜில் ஒரே தினத்தில் மூன்று அணிகளுக்காக விளையாடி ஒவ்வொரு ஆட்டத்திலும் சதம் எடுத்தார். நான்கு வருடங்களுக்கு மட்டையைப் பிடிக்காமல் இருந்துவிட்டு 1912–ஆம் ஆண்டு தமது 39–ஆம் வயதில் ஸஸ்ஸெக்ஸுக்கு விளையாடிய போது அந்த சீசனில் சராசரி 50.36 ரன்கள் எடுத்தார். இவை எல்லாவற்றுக்கும் மேலாக அது வரை விளையாடப் படாத புதிய ஸ்ட்ரோக்குகளை ஆட்டத்தில் புகுத்தினார். அந்த ஸ்ட்ரோக்குகளில் ஒன்றுதான் 'லேட் கட்!'

ரஞ்சி ஒரு மாபெரும் கிரிக்கெட் வீரராகப் புகழ் பெற்ற பின்னரே பிரிட்டிஷ் அரசிடம் மாறாத பக்தியும் அன்பும் கொண்டவர். உலக யுத்தத்தின் போது இங்கிலாந்துக்காகப் போர் புரிந்தார். விளையாட்டுக்கு பங்கம் விளைவிக்கும் என்று அறிந்தும் கைகால்களை இழக்கவும் தயாராயிருந்தார்.

மூன்றாவதாக அவர் ஓர் இந்தியக் குடிமகன். 'லீக் ஆஃப் நேஷன்ஸில்'

# விளையாட்டில் சூரர் நிர்வாகத்தில் ஜமஜி

நவநகர் பிரதேசத்தின் குறுநில மன்னர் ஆனார். வியாதியும், புழுதியும் நிறைந்த நவநகரை எழில் கொஞ்சும் கனவு நகரமாக மாற்றினார். பொருளாதார நிலைமை சீர் பெற ஒரு துறைமுகமும் அமைத்தார். இதனால் இவர் கிரிக்கெட்டில் காட்டிய சாதுர்யத்தை நிர்வாகத்திலும் காட்டினார் என்று சொல்லிவிட முடியாது. புதிய மருத்துவமனை துவக்க 2000 பவுண்டுகளும் அதன் துவக்க விழாவிற்கு வந்த வைஸ்ராயை வரவேற்று உபசரிக்க 40,000 பவுண்டுகளும் செலவழித்தார்!

இந்தியப் பிரதிநிதியாய் இருந்தார். விடுதலைப் போராட்டத்திலும் பங்கேற்றார். இந்திய அரசர்கள் அவையின் தலைவராய் இருந்த அவர் சுதந்திரத்துக்குப் பின் பழைய முடி ஆட்சி முறையே பின்பற்றப்பட வேண்டும் என்ற கொள்கை கொண்டிருந்தார்!

தீராத ஆஸ்த்துமா நோய் இவர் உயிரைப் பலி கொண்டது. தனிமை நிறைந்த வாழ்க்கையில் அவருக்குத் துணையாய் இருந்தது 'பாப்ஸ்' என்ற கிளி.

நன்றி: **கார்டியன்**

தமிழ்வடிவம்: **சிதாரவி**

---

இழவர்: அந்த டாக்டருக்கு என்னைக் கண்டால் வரவர ரொம்பக் கிண்டலாய்ப் போச்சு!

இவர்: ஏன் அப்படி?

கிழவர்: வலி போடப் போறேன்னு சொன்னா அவரிடம் வலிக்குமேன்னு சொன்னால்



கொஞ்ச நேரம் பல்லைக் கடிச்சிக்கோங்கோன்னு சொல்றார்!

இவர்: அதிலே என்ன கிண்டல் இருக்கு?

கிழவர்: எனக்குப் பல்லே கிடையாதே!

கா. நூர் கன்னியப்பன்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

# Money *at Home* Vanishes



## Keep it at KCUB

Do not give in to temptations!
What little money you have, save it
at KCUB and see it grows in to a real wealth.




**THE KUMBAKONAM CITY UNION BANK LTD**

REGISTERED OFFICE : KUMBAKONAM 612001

**FOR PROTECTION AND GROWTH**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# அழகிய பாரம்பரியம்



எழிலை வெளிப்படுத்தும் இளஞ்சாயல்கள்,
எடுப்பான நெசவுகள், மனங்கவரும் டிசைன்கள்.

அழகிய ஃபாஷன் விரும்பிகளுக்கு அழகிய
கிராவியரா சூட்டிங்ஸ்

GRAVIERA® SUITING GR